குமரன்

ஆரம் 17, முத்து 16

November 30, 1939

Record no. 313

*Kumaran*

*Āram 17, muttu 16*

*November 30, 1939*

Record no. 313

REGD. NO. M. 1823. 12 பக்கங்கள்.

சந்தா விவரம்

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
ஸிலோன் ரூ. 6-0-0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு
ஷ 1-க்கு ரூ. 7-0-0

# குமரன்

விளம்பரம்.

நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்ச் ஒன்றுக்கு ரூ. 2-0-0
வியாபார சம்பந்தமானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கு எழுதவும்.

வியாழன் தோறும் வெளிவரும் — மாதப் பதிப்பும் சேர்ந்தது. — PUBLISHED EVERY THURSDAY.

ஆரம் 17. — காரைக்குடி, பிரமாதி-ஷ கார்த்திகை-மீ 15-உ (30-11-39) — முத்து 16

# அரசியல் நிர்ணய சபை அமைக்க வேண்டும்

## சமரசத்துக்கு இடங் கொடுக்க ஏற்பாடு

## மகாத்மாவின் கொள்கைக்கு அங்கீகாரம்

### காங்கிரஸ் காரியக்கமிட்டி தீர்மானம்

அகில இந்திய காங்கிரஸ் காரியக் கமிட்டி அலகபாத் ஆனந்தபவனில் ஐந்து நாள் கூடி தற்போதைய நெருக்கடியைப் பற்றியும் மேற்கொண்டு காங்கிரஸ் பின்பற்றவேண்டிய வழியைப்பற்றியும், ஆயிரம் வார்த்தைகளுக்கு அதிகம் கொண்ட நீண்டதொரு தீர்மானம் செய்திருக்கிறது. கூட்ட நடவடிக்கைகளில் மகாத்மாவும் கலந்து கொண்டார். மகாத்மாவே காங்கிரஸ் நிர்வாகத்தை ஏற்று அவ்வப்போது தக்க ஆலோசனை கூறவேண்டுமென அங்கத்தினர்கள் அபிப்பிராயப்பட்டு, அவரே தீர்மானத்தைத் தயாரிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். அவ்வாறே மகாத்மாவும் தீர்மானத்தைத் தயாரித்து சமர்ப்பித்தார். அவரது தீர்மானத்தை விளக்கி மகாத்மா நீண்ட நேரம் பிரசங்கம் செய்தார். பலத்த விவாதமும் நிகழ்ந்தது. தீர்மானத்தில் பிரிட்டிஷ் சர்க்காரோடு இன்னும் சமாசம் செய்வதற்கு இடம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. தீர்மானத்தின் முக்கிய பகுதிகள் வருமாறு:—

### யுத்த நோக்கம்

இந்த யுத்தமும் 1914-ம் வருடத்து யுத்தத்தைப்போல், ஏகாதிபத்தியக் கொள்கையை வற்புறுத்தவே நடப்பதாகத் தெரிகிறது. இவ்வித நிலையில் காங்கிரஸ் யுத்தத்தில் கலந்துகொள்ள முடியாது. யுத்த விஷயத்தில், இந்தியாவின் செல்வத்தைச் சுரண்டுவதை பார்த்துக்கொண்டிருக்க முடியாது. யுத்தத்தின் நோக்கமென்ன வென்பதைப்பற்றி காரியக் கமிட்டி கேட்டதற்கு, பிரிட்டிஷ் சர்க்கார் அளித்துள்ள பதில் முற்றும் அதிருப்திகரமாக இருக்கிறது. அதோடு, வகுப்புப் பிரச்னையைக் கிளப்பிவிட்டு, இந்திய சுதந்திரத்துக்குக் குறுக்கே மைனாரிட்டிகள் பிரச்னையும் சமஸ்தானங்கள் விஷயமும் நிற்பதாகவும் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

### வகுப்பு வாதம்

காங்கிரஸ் கோரிக்கைகளை அங்கீகரிக்கும் விஷயத்தில், வகுப்பு வாதத்துக்கு இடமேயில்லை. சிறுபான்மையோருக்கு வேறு விஷயங்களில் அபிப்பிராயபேதமிருந்தாலும், இந்தியா சுயேச்சை பெறும் விஷயத்தில் யாருக்கும் அபிப்பிராய பேதமில்லை. சமஸ்தானாதிபதிகள், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பிரதிநிதிகளாகவே இந்தியாவில் இருக்கின்றனர். பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார், சமஸ்தானப் பிரஜைகளின் வருத்தத்தைப் புறக்கணித்தே வருகிறார்கள். பொருத்தமற்ற காரணங்களைக் கூறிக்கொண்டு, பிற்போக்கானவர்களுடன் சேர்ந்து பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார், ஏகாதிபத்தியக் கொள்கையை இந்நாட்டில் நிலைநிறுத்தப் பார்க்கின்றனர்.

### யுத்த நெருக்கடி

காங்கிரஸ் யுத்த நெருக்கடியைப்பற்றி நன்கு பரிசீலனை செய்துபார்த்தது. இந்த சந்தர்ப்பத்தில் அது பேரம்பேசிப் பலனடைய உத்தேசிக்கவில்லை, வேறு எவ்விஷயமும் கவனிக்கப்படுமுன், இந்தியாவின் சுதந்திர விஷயம் திருப்திகரமாக முடிவு செய்யப்படவேண்டும்.

### நிர்வாகப் பொறுப்பு

பொதுஜனப் பிரதிநிதிகளுக்கு உண்மையான அதிகாரம் அளிக்கப்படாதவரையில், இடைக்காலத்தில் கூட காங்கிரஸ், சர்க்கார் நிர்வாகத்தை ஏற்றுக்கொள்ள முடியாது. ஆகையால், காங்கிரஸ் தலைவர் நவம்பர் 4-உ வைஸ்ராய்க்கு அனுப்பிய பதிலை இக்கமிட்டி அங்கீகரிக்கிறது.

### அரசியல் நிர்ணய சபை

இந்தியாவின் அரசியலை, அரசியல் நிர்ணய சபை மூலம் தேச மக்களுக்கு அதிகாரம் அளித்தால்தான் ஏகாதிபத்தியக் கொள்கை மறைந்தது என்று கருத முடியும். மேற்கொண்டு காங்கிரஸ் ஒத்துழைக்கும் விஷயத்தை அப்போதுதான் நிர்ணயிக்க முடியும். அரசியல் நிர்ணய சபை மூலம் அரசியலை திட்டப்படுத்துவதே ஜனநாயகத்துக்கு ஏற்றவழியெனக் கமிட்டி கருதுகிறது. வகுப்புத் தகராறு போன்ற கஷ்டங்களைத் தீர்க்கவும் அரசியல் நிர்ணய சபையே ஏற்றதாகும். அங்கீகரிக்கப்பட்ட மைனாரிட்டிகளின் உரிமைகளைத் திருப்திகரமான முறையில் பாதுகாக்கும் முறையில் அச்சபை அரசியலை வகுக்கும். பரஸ்பரம் அங்கீகரிக்க முடியாத உரிமைகளை மத்தியஸ்தம் மூலம் தீர்த்துக்கொள்ளலாம். வயது வந்தோரனைவருக்கும் ஓட்டுரிமை யளித்து இச்சபைக்குத் தேர்தல் நடத்தவேண்டும். தனித்தொகுதி வேண்டுமென்று விரும்பும் மைனாரிட்டி வகுப்புகளுக்கு இப்போதிருக்கும் முறைப்படி தனித் தொகுதியை வைத்திருக்கலாம். அவற்றின் ஜனத்தொகைக் கேற்றபடி ஸ்தானங்கள் அளிக்கப்படவேண்டும்.

### ஒத்துழையாமை

முதற்படியாக காங்கிரஸ் மந்திரிகள் ராஜிநாமாச் செய்தார்கள். பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் தங்கள் கொள்கையை மாற்றி, காங்கிரஸ் அபிப்பிராயத்தை அங்கீகரிக்கும் வரையில் இந்த ஒத்துழையாமை நீடிக்கும். ஆனால், எதிரிகளுடன் கவுரவமான ஒப்பந்தம் ஏற்பட எல்லாவித முயற்சிகளும் செய்யவேண்டியது சத்தியாக்கிரகியின் கடமையாதலால், சமாதானத்துக்கு வழி தேட அவர் தவறக் கூடாது. ஆகவே, பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் சமாசத்துக்கு வழியில்லாமல் செய்துவிட்டாலும் கவுரவமான ஒரு ஒப்பந்தத்துக்கு வர காங்கிரஸ் எல்லா வழிகளிலும் முயற்சி செய்யும்.

### சட்ட மறுப்பு

இந்தியாவின் சுதந்திரத்துக்கும் கவுரவத்துக்கும் விரோதமான வழிகளில் சர்க்கார் இந்திய மக்களை வற்புறுத்தினல் காங்கிரஸ் பலாத்கார மற்ற வழிகளில் அதை எதிர்த்துப் போராடும். ஆயுதம் தாங்கிப் போராடுபவரிடம் எவ்வளவு கட்டுப்பாடும், ஒற்றுமையும், ஒழுங்குமிருக்கவேண்டுமோ அவ்வளவு கட்டுப்பாடும், ஒற்றுமையும், ஒழுங்கும் சட்ட மறுப்பை நடத்துபவரிடமும் இருக்கவேண்டும். சட்ட மறுப்புக்குத் தயார் என்பது உண்மையானல், காங்கிரஸ்காரர்கள் அதை வெளிப்படுத்திக் காட்டவேண்டும்.

### ஆக்க வேலை

அவர்கள் கதர் அபிவிருத்தியில் ஈடுபடவேண்டும். ஆலைத் துணியையும் விலக்கவேண்டும். வகுப்பு ஒற்றுமைக்கு வழி தேடவேண்டும். ஹிந்து காங்கிரஸ்காரர்கள் ஹரிஜனங்களுடன் அதிகமாகப் பழகி அன்பு செலுத்தவேண்டும். அரசியல் நிர்ணய சபையின் கொள்கையையும் தத்துவத்தையும் பொதுஜனங்களுக்கு எடுத்துச் சொல்லி விளக்கவேண்டும்.

### அடுத்த கூட்டம்

காங்கிரஸ் காரியக் கமிட்டியின் அடுத்த கூட்டம் வார்தாவில் டிசம்பர் 18உ ஆரம்பமாகும்.

### பர்டோலியில் மகாத்மா

காந்திஜி ஜனவரி 15-ந் தேதி முதல் ஒரு மாதம் வரை பர்டோலியிலிருப்பார். பின் அவர் ஹரிஜன சேவக சங்க நிர்வாகக் கமிட்டிக் கூட்டத்துக்காக, ஆமதாபாத் சபர்மதி ஆசிரமத்துக்குச் செல்வார்.

### சுபாஷ் போஸ் கண்டனம்

காங்கிரஸ் காரியக்கமிட்டி நிறைவேற்றிய தீர்மானத்தைப்பற்றி ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸ் தமது "முன்னேற்றக் கட்சி" யென்ற பத்திரிகையில் எழுதியுள்ள கட்டுரையில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:

பிரிட்டிஷ் சர்க்கார் சமாசத்துக்கு வழியில்லாமல் செய்து விட்டாலும் காங்கிரஸ் காரியக்கமிட்டி சமாசத்துக்கான எல்லா வழிகளையும் நாடும் என்று சொல்லியிருப்பது, உதைத்த காலை முத்தமிடுதற்கொப்பேயாகும். இது ராஜீய உலகில் அனுஷ்டிக்கத்தக்க முறையன்று. சட்ட மறுப்புக்கு ஆயத்தமாவதற் குரிய நிபந்தனைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனல், தொண்டர்களைத் திரட்டுவது பற்றியோ, நேரடியான வேலையை ஆரம்பிப்பதுபற்றியோ, பணம் திரட்டுவதுபற்றியோ ஒரு வார்த்தையுமில்லை. நாட்டுக்கு ஒரு வழி காட்டப்படவில்லை. இதை எல்லாம் விட்டுவிட்டு நாம்கார் காங்கிரசுக்கு ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன. தேர்தலுக்குத் தேதிகள் குறிக்கப்பட்டிருக்கின்றன. யுத்த நெருக்கடி ஏற்பட்டிருக்கும் இச்சமயத்தில் தேர்தலை ஒத்திவைக்க வேண்டுமென்பதை ஒரு குழந்தையும் ஒப்புக்கொள்ளும். காரியக் கமிட்டித் தீர்மானம் வெறும் வார்த்தைகளால் அமைக்கப்பட்டிருக்கிறது. காங்கிரஸ் மந்திரிகள் மீண்டும் பதவிபெற இடமேற்படக் கூடுமென்ற நம்பிக்கையுடனேயே காங்கிரஸ் தலைவரும், இதர பிரபலஸ்தர்களும் அறிக்கைகள் வெளியிட்டு வருகின்றனர். மகாத்மா பல காரணத் தேசியப் போராட்டத்துக்கு நாடு தயாராகவில்லையென்று சொல்லி வருகிறார். நாடு தயாராகவில்லையா? அல்லது காரியக் கமிட்டியிலுள்ள பிரபலஸ்தர்கள் தயாராகவில்லையா? ஆரம்பத்திலேயே மகாத்மா போராட்டத்தைஆரம்பிக்க ஒப்புக்கொண்டிருந்தால் இப்போது நடக்கும் தகராறுக்கே இடமிருக்காது. மிதவாதிகள் தீவிரவாதிகள் போராட்டமும் எழுந்திருக்காது.

—

## ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமை

### ஏற்படுதற்குரிய மார்க்கம்

லாகூர் ஜாதி யொழிப்பு சங்கத்தின் ஆதரவில் நடைபெற்ற ஒரு மகாநாட்டில் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை யேற்படுத்துவதற்குப் பலரும் பல மார்க்கங்களைத் தெரிவித்தனர். அவற்றின் சாரம் வருமாறு:—

"வகுப்புப் பிரிவினைக்கு முக்கிய காரணம் உணவுதான். எல்லாருக்கும் போதிய அளவு உணவு அளித்தால், இந்தப் பிரச்னை அடியோடு தீர்ந்துவிடும். எல்லோருக்கும் ஓட்டுரிமை யளிப்பதும் மற்றொரு மார்க்கமாகும்."

—டாக்டர் கோபிசந்த் பார்கவா

"சமபந்தி போஜனமும், கலப்பு மணமுமே சாதி வேற்றுமையைப் போக்கச் சரியான வழி. சாதிப் பிரிவினை ஒழிக்கப்படவேண்டும். ஹிந்துக்கள் முஸ்லிம்களுடன் சமபந்தி போஜனமும், கலப்பு மணமும் புரியவேண்டும்."

—லாலா சாந்தராம்

"முல்லாக்களும் பண்டிதர்களுமே வேற்றுமைக்குக் காரணஸ்தர்கள். இந்தமதத் தலைவர்களின் போதனைகளுக்கு இந்துக்களும் முஸ்லிம்களும் செவி சாய்க்கக் கூடாது" —மௌல்வி அப்துல் ஹக்

'இந்து முஸ்லிம் வேற்றுமைக்குக் காரணம் தலைவர்கள் தாம். சில்லறை விஷயங்கட்காகச் சண்டையிடாமல், எல்லோரும் ஒன்று சேர்ந்து இந்தியாவின் விடுதலைக்காகப் போராட வேண்டும்."

—டாக்டர் கோகேந்திரநாத் ஆரியா

மனமாற்ற மேற்படாமல், உண்மையான ஐக்கியம் ஏற்பட முடியாது.

—ஸ்ரீமதி ராமேஸ்வரி நேரு

சாதி உணர்ச்சியை வேரறுக்க தீவிர நடவடிக்கை யெடுக்கவேண்டுமெனக் காங்கிரஸ் மகா சபையையும், சாதி முறையை ஒவ்வொருவரும் கண்டனம் கட்டிக்கொள்ள வேண்டுமென்றும் கேட்டுக்கொள்வதாக அம் மகாநாட்டில் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# ரேடியோச் செய்திகள்

## சென்னை

### நவம்பர் 30உ வியாழன்

ம. கி.

1·00 அ. இ. ரே. வித்வான் ஜலதரங்கம்
1·35 பெண்கள் உலகம்—சங்கீதம்
1·40 பெண்களுக்குரிய தொழில்கள் 'நடிப்பு' ஸ்ரீமதி எஸ். டி. சுப்பு லக்ஷ்மி தமிழில் பேசுவார்.
5·20—6·00, 6·05—6·45 விஞ்சமுரி ஸ்ரீ வரதராஜ ஐயங்கார் வாய்ப்பாட்டு
8·35 ஈரோடு ஸ்ரீ விஸ்வநாதய்யர் பிடில்

★

### டிசம்பர் 1உ வெள்ளி

பகல்

7·30 ஸ்ரீ டி. கே. ராதாகிருஷ்ணன் புல்லாங்குழல்
1·00& 1·35 ஸ்ரீ டி. எஸ் கிருஷ்ண ஐயங்கார் வாய்ப்பாட்டு

மாலை

5·20—6.00, 8·35—9·00 ஸ்ரீ எம். எம். தண்டபாணி தேசிகர் ஷை
6·05 ஸ்ரீமதிகள் சின்னப்பாப்பவும் சாவித்திரியும் ஷை
6·45 ஸ்ரீமதி வி. எஸ். ராஜமும், ஸ்ரீ ஜி. எஸ். விஜய ராவும் ஷை
7·00 "வண்டிக்காரன்" ஸ்ரீ கே. ஜே. மகாதேவன் தமிழ் பேச்சு
9·45 ஸ்ரீ டி. கே. ராதாகிருஷ்ணன் புல்லாங்குழல்

★

### 2உ சனி

பகல்

7·30& 8·40 ஸ்ரீ துர்கா பிரசாத் வாய்ப்பாட்டு
1·00 ஸ்ரீமதி வி. சீதாலக்ஷ்மி அம்மாள் ஷை
5·20& 8·05 ஸ்ரீ டி. வைத்யநாதய்யர் ஷை
6·00 ஸ்ரீமதி சீதாலக்ஷ்மி அம்மாள் ஷை
6·45 "இணையாசிரியர்" தமிழ் நாடகம்
7·50–8·35 ஸ்ரீமதி நிர்மலா வாய்ப்பாட்டு

★

### 3உ ஞாயிறு

பகல்

7·30;1·00& 2·05 ஸ்ரீமதி ஜி. விஸ்வேஸ்வரம்மா வாய்ப்பாட்டு
1·35 ஸ்ரீ எஸ். ஆர். குப்புசாமி ஷை
4·00 ஸ்ரீமதி சுபத்ரா ஷை
5·20 ஸ்ரீ டி. எஸ். கிருஷ்ண மூர்த்தி ஷை

மாலை

6·05& 7·50 ஸ்ரீ கங்காதரம் பிள்ளை நாகசுரம்
6·45 மலையாளம் பாட்டுகள்
8·30 ஸ்ரீமதி கே. நாகாம்புஜம் வாய்ப்பாட்டு

★

### 4உ திங்கள்

பகல்

1·00,1·45& 6·05 ஸ்ரீ கே. ஏ. ராதாகிருஷ்ண பிள்ளை வாய்ப்பாட்டு
4·06 "உடல் சாஸ்திரம்"—ஒரு வைத்தியர் பேச்சு
5·00& 5·20 ஸ்ரீமதி கே. சாவித்திரி அம்மாள் வீணையும் வாய்ப்பாட்டும்

மாலை

6·45& 7·50 மகாராஜபுரம் ஸ்ரீ விஸ்வநாதய்யர் ஷை
7·00 "வெற்றிக்குக் காரணம்" ஸ்ரீ வி. கோவிந்தன் தமிழ்ப் பேச்சு

★

### 5உ செவ்வாய்

பகல்

1·00 ஸ்ரீமதி எம். தேவகி அம்மாள் வாய்ப்பாட்டு
5·20& 7·50 பாலையூர் ஸ்ரீ கனகசபாபதி ஐயர் வாய்ப்பாட்டு
6.05 ஸ்ரீமதி வி. சரோஜினி ஷை

6·45 "வேலை வரவேண்டும்"—தமிழ் நாடகம்
8·25 ஸ்ரீ சிவவடிவேல் பிள்ளை பிடில்

★

### 6உ புதன்

பகல்

1·00& 1·45 ஸ்ரீ. டி. எஸ். கோபாலகிருஷ்ணய்யர் வாய்ப்பாட்டு
5·20 ஸ்ரீமதி அலமேலு கோவிந்தராஜன் ஷை

மாலை

6·25& 8·30 ஸ்ரீ வி. எஸ். பார்த்தசாரதி ஐயங்கார் கோட்டு வாத்தியம்
7·00 "வர்த்தமானம்" தமிழ்ப் பேச்சு
7·50 குன்னக்குடி ஸ்ரீ வெங்கட்ராம ஐயர் வாய்ப்பாட்டு

★

### 7உ வியாழன்

பகல்

1·00 ஸ்ரீமதி எஸ். முக்தாம்பாள் வாய்ப்பாட்டு
1·40 "பத்திரிகை" 'குகப்ரியை' பேச்சு

மாலை

5·20& 7·50 ஸ்ரீ பி. நாராயணசாமி பிள்ளை வாய்ப்பாட்டு
6·05 ஸ்ரீ டி. வி. நமசிவாயம் ஷை
6·30& 8·20 ஸ்ரீ ஏ. கே. சுப்பாராவ் புல்லாங்குழல்

---

## திருச்சி

### நவம்பர் 30உ வியாழன்

1·35—2·00, 2·30—3·00 ஸ்ரீ பி. எஸ். நடராஜன் வாய்ப்பாட்டு.
2·00 செம்மங்குடி ஸ்ரீ நாராயணஸ்வாமி ஐயர் பிடில்.
5·20—6·00, 6·45—7·15 ஸ்ரீமதி கௌரி ராமுண்ணி மேனன் வீணை.
7·50—8·30, 8·45—9·20 ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் வாய்ப்பாட்டு.

★

### டிசம்பர் 1உ வெள்ளி

பகல்

8 10 சேலம் ஸ்ரீ ஜி. தேசிகன் வாய்ப்பாட்டு.
1·35 ஸ்ரீ எல். ஆர். நீலமேகம் பிள்ளை பிடில்.
5·20& 6·45 ஸ்ரீமதி எம். எஸ். வடிவாம்பாள் வீணையும் வாய்ப்பாட்டும்.
7·15 தமிழ் காவ்யங்களில் சோக ரசம்—ஸ்ரீ ந. மு. வேங்கடசாமி நாட்டார் பேச்சு.
7·50 திருவெண்காடு ஸ்ரீ சுப்ரமணிய பிள்ளை நாகசுரம்.
9·45 சேலம் ஸ்ரீ தேசிகன் வாய்ப்பாட்டு.

★

### 2உ சனி

பகல்.

8·10 ஸ்ரீ எஸ். ராஜம் வாய்ப்பாட்டு.
1·35 கடத்தூர் ஸ்ரீ சங்கரராம ஐயர் வீணை.
5·20& 8·30 ஸ்ரீமதி அபிராமசுந்தரி பிடில்.
6·45& 9·45 திருப்பாம்பரம் ஸ்ரீ ஸ்வாமிநாத பிள்ளை புல்லாங்குழல்.
7·50 ஸ்ரீ எஸ். ராஜம் வாய்ப்பாட்டு.

★

### 3உ ஞாயிறு

பகல்

8·10& 5·20 ஸ்ரீ கே. ஆர். குப்புசாமி வாய்ப்பாட்டு.
1·35 மாஸ்டர் பாலசந்த்ரன் சித்தார்.
6·45& 9·45 ஸ்ரீ ஏ. நாராயணய்யர் கோட்டு வாத்தியம்.
7·15 முத்தொள்ளாயிரம்: வாசித்தல், ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார்.
7·50 ஸ்ரீமதிகள் பிருந்தாவும் முக்தாவும் வாய்ப்பாட்டு.

★

### 4உ திங்கள்

பகல்

8·10 ஸ்ரீ ஜி. கல்யாணராமய்யர் வாய்ப்பாட்டு.
2·00 ஸ்ரீமதிகள் கோமளம் சகோதரிகள் ஷை.
2·30 ஸ்ரீ அகிலேச்வர ஐயர் ஷை.
5·20 ஷை.
6·05 "தன்னம்பிக்கை உள்ளவர்" சிறு நாடகம்.
6·45 ஸ்ரீமதிகள் கோமளம் சகோதரிகள் வாய்ப்பாட்டு.
7·15 "ரோஜா"—ராவ் சாகிப் ஸ்ரீ ஜி. ராஜகோபால் பிள்ளை பேச்சு.
7·50& 9·45 ஸ்ரீ வைணிகப்ரவீண வெங்கடகிரியப்பா வீணை.
8·30 ஸ்ரீ கல்யாணராமய்யர் வாய்ப்பாட்டு.

★

### 5உ செவ்வாய்

பகல்

8·10 ஸ்ரீ வி. சுந்தரேசன் பிடில்.
1·35 சாக்கோட்டை ஸ்ரீ நடேசய்யர் வாய்ப்பாட்டு.
6·45 சாக்கோட்டை ஸ்ரீ நடேசய்யர் வாய்ப்பாட்டு.
5·20& 8·45 ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் ஷை.
7·15 கனவின் எதிரொலி—நாடகம்.
7·50& 9·45 ஸ்ரீ வி. துரைசாமி ஐயங்கார் வீணை.

★

### 6உ புதன்

பகல்

8·10 ஸ்ரீ எம். என். நடராஜ பிள்ளை புல்லாங்குழல்.
1·35 ஸ்ரீ வி. கே. ராகவமேனன் வாய்ப்பாட்டு.
6·45 ஷை.
5·20 ஸ்ரீ கே. வி. தியாகராஜன் கோட்டு வாத்தியம்.
9·45 ஸ்ரீ வி. ஆர். மணி ஐயர் பிடில்.

★

### 7உ வியாழன்

பகல்

8·10 ஸ்ரீமதி கே. கொச்சம்மணி வாய்ப்பாட்டு.
1·35 சேத்தூர் ஸ்ரீ சுந்தரேச பட்டர் பிடில்.
6·45 ஷை.
5·20 ஸ்ரீ டி. பி. ராமகிருஷ்ணன் வாய்ப்பாட்டு.
7·15 "லட்சியம்"—ஸ்ரீ வி. சாரநாதன் பேச்சு.
7·50& 9·45 ஸ்ரீ கோவிந்தய்யங்கார் வீணை.
8·30 ஸ்ரீமதி கொச்சம்மணி வாய்ப்பாட்டு.

★

### ரேடியோவில் சில விசேஷ நிகழ்ச்சிகள்

**முத்தொள்ளாயிரம்**

இது தமிழில் உண்மைக் கவிதைக்குச் சிறந்த உதாரணம். 2700 வெண்பாக்கள் அடங்கிய இக்காவியம் சேர சோழ, பாண்டிய மன்னர்களைப் புகழ்ந்து பாடப்பட்டது. இவற்றில் 108 பாக்கள்தான் கிடைத்திருக்கின்றனவாம். இவற்றில் இரண்டொன்றைப் பொறுக்கியெடுத்து டிசம்பர் 3உ திருச்சி நிலையத்தில் பாடிக் காட்டுவார்கள்.

**கொண்டாட்டம்**

அருணகிரியார் ஜயந்தி திருச்சியிலும் மதராஸிலும் டிசம்பர் 11ந் தேதியிலும், கவிக் குஞ்சர பாரதியார் தினம் 10உ மதராஸிலும் கொண்டாடப்படும்.

---

### வெளிநாட்டு ஸ்டேஷன்கள்

ஆங்கிலத்தில் செய்திகள் பரப்பிவரும் சில முக்கியமான வெளிநாட்டு ஸ்டேஷன்களும், அவை செய்திபரப்பும் நேரமும் கீழே தரப்படுகின்றன:

நியூயார்க் பிற்பகல் 2.30 மணி, இரவு 10·30; ஆத்லான் (அயர்லாந்து) பிற்பகல் 3·15, இரவு 11·15; ரேடியோ ரோமா (இத்தாலி) காலை 6; மாலை 4·30, இரவு 9·30, 11·49. பிட்ஸ்பர்க் இரவு 9·30, 10·30; பாரிஸ் மாலை 4·30 இரவு 11·30; டிரவுசர் ஜலந்து மாலை 6, 8; சுங்கிங் காலை 8·15; 4·45, 7·30. ஹாங்காங் மாலை 5·30. மஞ்சுகோ இரவு 9. மணிலா மாலை 4·5. 6, 6·20. பினாங்கு மாலை 7·5. சைகோன் மாலை 5. சிங்கப்பூர் மாலை 5·25. டோகியோ மாலை 6.







**ஜெர்மன் அடக்குமுறை**

ஸெக் தேசத்தில் ஜர்மனி கொடிய அடக்குமுறைகளைக் கையாள்வதாகச் செய்திகள் வெளிவந்திருக்கின்றன. அங்கு சர்வகலாசாலை ஆசிரியர்களெல்லாம் கைது செய்யப்பட்டனர். மாணவர் ஸ்தாபனத் தலைவர்களான 9 மாணவர்கள் சுட்டுக் கொல்லப்பட்டனர். 17உ பிரேக்கில் மட்டும் 124 ஸெக்குகள் சுட்டுக் கொல்லப்பட்டனராம். 15உ இரவில் மட்டும் 8000 மாணவர்கள் கைது செய்யப்பட்டனராம். பல ஜெர்மன் படைகள் ஸ்லோவேகியாவுக்குப் போய்ச் சேர்ந்திருக்கின்றன.

## நவம்பர் 21உ செவ்வாய்

இன்று காலை இங்கிலாந்தின் கிழக்குக் கரையில் பறந்த ஜர்மன் விமானமொன்று சுட்டு வீழ்த்தப்பட்டது. அக்டோபர் 16ந் தேதி முதல் இன்றுவரை சுமார் 20 ஜர்மன் விமானங்கள் வரைச் சுட்டு வீழ்த்தப்பட்டிருக்கின்றன.

**ஜெர்மன் சரக்குகளைக் கைப்பற்ற**

ஜெர்மானியர் கடலில் சுரங்க வெடிகள் வைப்பதற்குப் பதில் நடவடிக்கையாக, பிரிட்டிஷார், ஜெர்மனியிலிருந்து அனுப்பப்படும் சரக்குகளைக் கொண்ட கப்பல்களைக் கைப்பற்றுவர் என காமன்ஸ் சபையில் மிஸ்டர் சேம்பர்லேன் அறிவித்தார்.

ஜர்மனி, நடுநிலைமை நாடுகளுக்குச் சொந்தமான கப்பல்களை, சுரங்க வெடிகள் மூலம் மூழ்கடித்து வருவது ஹேக் உடன்படிக்கையை மீறிய செயலாகுமென்றும், அந்நாடு மிருகத்தனமான முறைகளைக் கையாள்வதை முன்னிட்டு இம்முறையைக் கையாளப் போவதாகவும் அவர் தெரிவித்தார்.

நவம்பர் 18ந் தேதியோடு முடிவடைந்த வாரத்தில் ஜெர்மனிக்குப் போவதாகச் சந்தேகிக்கப்பட்ட 14,000 டன் பொருள்களை பிரிட்டிஷ் கப்பல்கள் சோதனை போட்டு கைப்பற்றியிருக்கின்றன.

**4 கப்பல்கள் பலி**

மூன்று பிரிட்டிஷ் மீன்பிடிக்கும் கப்பல்களும் ஒரு சுரங்கவெடிகளை அகற்றும் கப்பலும் எதிரியால் மூழ்கடிக்கப்பட்டன. இவற்றிலிருந்து 208 பேர் காக்கப்பட்டனர். ஒரு ஜப்பானியக் கப்பல் இங்கிலாந்தின் கிழக்குக் கரைக்கு எதிரில் கடலில் மூழ்கிப் போயிற்று. வடகடலில் சுரங்க வெடிகளை வைத்த பொறுப்பை ஜெர்மன் ரேடியோ உத்யோக முறையில் ஒப்புக் கொண்டு விட்டது.

**நாசகாரிக்குச் சேதம்**

ஜிப்ஸி யென்ற பிரிட்டிஷ் நாசகாரிக் கப்பல் இங்கிலாந்தின் கிழக்கு பாகக்கடலில் ஒரு சுரங்க வெடிமீது மோதித் தரை தட்டிப் போயிற்று. 21 பேர் காயப்பட்டதாயும் 40 மாலுமிகள் காணப்படவில்லையென்றும் சொல்லப்படுகிறது.

## 22உ புதன்

2 சப்மரீன்கள் 3 தினங்களில் ஒரே பிரஞ்சு டார்ப்பிடோப்படகால் மூழ்கடிக்கப்பட்டதாகப் பிரஞ்சு அறிக்கை கூறுகிறது. பிரிட்டிஷ் யுத்தக் கப்பலொன்று ஐஸ்லாந்துக் கருகில் ஒரு ஜெர்மன் கப்பலை வழிமறித்தது. ஜெர்மன் கப்பலை மாலுமிகள் தாங்களாகவே மூழ்கடித்தனர். அவர்களை பிரிட்டிஷ் கப்பல் காப்பாற்றியது.

**மேற்குப் போர்முனை**

இன்று மேற்குப் போர்முனையில் நடந்த விமானப் போரில் 2 ஜர்மன் விமானங்கள் சுட்டு வீழ்த்தப்பட்டதாகப் பாரிஸ் அறிக்கை கூறுகிறது. ஜெர்மன் பீரங்கிகள் தீவிரமாகக் குண்டுகளைப் பொழிந்தன. ஹாலந்திலிருந்து ரைன் நதிவரை ஜெர்மன் துருப்புகள் திரட்டிவைக்கப்பட்டிருக்கின்றன.

**தீவு தாக்கப்பட்டது**

எதிரிகளின் ஆறு விமானங்கள் ஷெட்லண்டு தீவைத் தாக்கின. குண்டுகள் குறி தவறி விழுந்தன. ஒரு கடல் விமானத்தின் மீதும் வெடிகுண்டெறியப்பட்டது. விமானத்திலிருந்தவர்கள் ஜலத்தில் குதித்துத் தப்பினர். படகுகள் அவர்களைக் காப்பாற்றின. ஒரு தபால் கப்பலையும் தாக்கினர். ஆனால் அதுவும் தப்பிப் போயிற்று. பிரிட்டிஷ் விமான எதிர்ப்பு பீரங்கிகள் ஜெர்மன் விமானங்களைத் துரத்தின. நங்கூரமிடப்பட்டிருந்த கடல் விமானமொன்றை வெடிக்குண்டு தாக்க, அது எரிந்துபோயிற்று. ஆனால் உயிர்ச் சேதமில்லை.

**எஸ்ஸக்ஸில் சண்டை**

மாலையில் ஜெர்மன் விமானப் படையெடுப்பு எஸ்ஸக்ஸில் நடைபெற்றது. விமானங்களை வழிமறிக்க பிரிட்டிஷ் விமானங்கள் அனுப்பப்பட்டன. ஒரு ஜெர்மன் விமானம் சுட்டு வீழ்த்தப்பட்டது. மற்றொன்று ஓடிப்போயிற்று. ஒரு அவுட்டிற்கருகில் ஒரு ஜெர்மன் விமானம் முறிந்து விழுந்ததென்றும், 3 விமானிகள் இறந்து போயினரென்றும் ஆல்டெண்டு செய்தி கூறுகிறது.

**ஹாலந்து கண்டனம்**

ஜெர்மன் சரக்குகளைக் கைப்பற்றுவதெனப் பிரிட்டிஷார் தீர்மானித்திருப்பதைப் பிரான்ஸ் பூரணமாக ஆதரிக்கிறது. இதனால் ஹாலந்துக்குப் பாதகம் ஏற்படுமென டச்சு அதிகாரிகள் தெரிவித்திருக்கின்றனர்.

பிரிட்டிஷ் சர்க்கார் தங்கள் புதிய முறையை அமுலுக்குக் கொண்டுவரும் விஷயத்தில் நடுநிலைமை தேச வர்த்தகர்கள் சம்பந்தமாகக் கூடியவரை அனுதாபத்துடன் நடந்துகொள்வார்களென பிரிட்டிஷ் அதிகாரிகள் தெரிவித்திருக்கின்றனர். பிரிட்டன் கடலில் சுரங்க வெடிகள் வைக்கப்பட்டிருப்பதை உத்தேசித்து, பிரிட்டனுக்கும் ஹாலந்துக்கும் இடையில் நடந்துவந்த கப்பல் போக்குவரத்து அடியோடு ரத்துசெய்யப்பட்டுவிட்டது.

## 23உ வியாழன்

இரவில் போர் முனையில் பல விடங்களில் பீரங்கிப் பிரயோகம் நிகழ்ந்தது.

# ஜெர்மன் சரக்குகளைக் கைப்பற்ற

## பிரிட்டனின் பதில் நடவடிக்கை

### ஜெர்மன் விமானங்கள் பல சுட்டு வீழ்த்தப்பட்டன

★

மேற்குப் போர் முனையில் 7 பிரிட்டிஷ் விமானிகள் 7 ஜெர்மன் விமானங்களைச் சுட்டு வீழ்த்தினர். ஒரு வேவு பார்க்கும் ஜெர்மன் விமானம் சுட்டு வீழ்த்தப்பட்டது. பிரான்சு மீது 22உ பகலில் பறந்த ஜெர்மன் விமானங்கள் 5 சுட்டு வீழ்த்தப்பட்டன. இன்று காலை பிரான்ஸி கோமட்டன் என்ற இடத்தில் ஒரு ஜெர்மன் விமானம் சுட்டு வீழ்த்தப்பட்டது. நள்ளிரவில் பாரிஸ்மீது விமானப் படையெடுப்பு ஏற்பட்டது. பல இடங்களில் குண்டுகள் போடப்பட்டன. 10 நிமிஷ நேரத்தில் படை யெடுப்பு அபாயம் நீங்கியதாக அறிவிக்கப்பட்டது.

**ஹிட்லர் ஆக்ஞை**

இன்று ஹெர் ஹிட்லர் சேனாபதிகளுடன் விவாதித்தார். எதிர்காலத்தில் கையாள வேண்டிய முறைகளைப்பற்றிக் கட்டளைகள் பிறப்பித்ததாகத் தெரிகிறது.

**காந்தச் சுரங்கவெடிப் போர்முறை**

ஜர்மன் சரக்குகளைக் கைப்பற்றுவதென்று பிரிட்டன் தீர்மானித்திருப்பதற்குப் பதில் நடவடிக்கையாக, தாங்கள் சுரங்க வெடிப் போர்முறையைப் பலப்படுத்தப் போவதாக ஜெர்மானியர் தெரிவித்திருக்கின்றனர். தேம்ஸ் நதி முகத்துவாரப் பிரதேசத்தில் பறந்த ஜெர்மன் விமானங்கள் பாரசூட்கள் மூலம் சுரங்க வெடிகளை வைத்ததாகக் கருதப்படுகிறது. இவை காந்தச் சுரங்க வெடிகளாகும். இம்முறையினால் தான் கப்பல் சேதம் அதிகமாக ஏற்பட்டு வருகிறது.

**பிரிட்டனுக்கு ஜெர்மானியர் உதவி**

ஜெர்மனியிலிருந்து வெளியேறி ரங்கூனில் தங்கியிருக்கும், ஒரு ஜெர்மானியர் பிரிட்டனின் யுத்தநிதிக்கு நன்கொடை உதவியிருக்கின்றார். உலகில் மிருகத்தனத்தை ஒழித்து சமாதானத்தை நிலைநாட்ட பிரிட்டன் செய்யும் யுத்தத்துக்கு உதவுவதாக அவர் குறிப்பிட்டிருக்கிறாராம்.

**ஜர்மானியருக்கு ரஷ்யப் பட்டம்!**

ஜர்மன் வெளிநாட்டு மந்திரி ஹெர் வான் ரிப்பன்டிராப்புக்கு "ஆர்டர் ஆப் லெனின்" என்ற உயரிய பட்டத்தை ருஷ்ய சர்க்கார் வழங்கியிருக்கின்றனர்.

**பார்லிமெண்டு கலைந்தது**

பிரிட்டிஷ் பார்லிமெண்டு கலைந்துவிட்டது. நவம்பர் 28-ந் தேதி இது மீண்டும் கூடும்.

**4 கப்பல்கள் மூழ்கின**

'அர்கோனட்' என்ற பிரிட்டிஷ் சுரங்க வெடிவாரிக் கப்பல் சுரங்க வெடியால் சேதமடைந்து மூழ்கிற்று. நால்வருக்குக் காயம். ஒரு பிரஞ்சு மீன் பிடிக்கும் கப்பல் திங்கட்கிழமையன்று அட்லாண்டிக் சமுத்திரத்தில் ஜெர்மன் சப்மரீனால் மூழ்கடிக்கப்பட்டது. 'அல்னு' என்ற கிரேக்க கப்பல் மூழ்கிற்று. ஜர்மன் சுரங்க வெடியே இதற்குக் காரணம் என்று நம்பப்படுகிறது.

**சிங்கப்பூர் கப்பல் விபத்து**

சிங்கப்பூர் துறைமுகத்தில் பிரிட்டிஷ் சுரங்க வெடிமீது மோதி சிர்தாஹு என்ற கப்பல் மூழ்கியது சம்பந்தமாக நடைபெற்ற விசாரணையில், கப்பல் பிரதம உத்யோகஸ்தரின் மாஸ்டர் சர்டிபிகட்டை ஒரு வருஷத்துக்கு சஸ்பெண்டு செய்ய விசேஷக் கோர்ட் முடிவு செய்தது. சுரங்க வெடிகள் வைக்கப்பட்டிருக்கும் இடங்களைப்பற்றிய தகவலை அவர் தெரிந்து கொள்ளாதது தவறு எனக் கூறப்பட்டது.

## 24உ வெள்ளி

இன்று வடகிழக்கு பிரான்ஸில் ஒரு ஜெர்மன் விமானம் சுட்டு வீழ்த்தப்பட்டது. இன்று இருமுறை விமானப் படையெடுப்பு ஏற்பட்டது.

**வடகடலில் மூழ்கடிக்கப்பட்டது**

'லோலண்டு' என்ற பிரிட்டிஷ் கப்பல் வடகடலில் டார்ப்பிடோ குண்டினால் மூழ்கடிக்கப்பட்டது.

மேற்குப் போர் முனையில் 3 நேசநேச விமானங்களைச் சுட்டு வீழ்த்தியதாக பர்லின் அறிக்கை கூறுகிறது. மோஸெல்லி நதிக்குக் கிழக்கே ஜெர்மன் துருப்புகள் படையெடுத்ததாயும், ஆனால் அவற்றின் முயற்சி பலிக்கவில்லையென்றும், சில ஜெர்மனியரைக் கைது செய்ததாயும் பாரிஸ் செய்தி கூறுகிறது.

**'மங்களூர்' மூழ்கியது**

இங்கிலாந்தின் கிழக்கு கரையோரமாகக் கடலில் நங்கூர மிடுகையில் "மங்களூர்" என்ற கப்பல் சுரங்க வெடி மீது மோதி மூழ்கிற்று. இதிலிருந்து 77 மாலுமிகள் (58 இந்தியர் உள்பட) காக்கப்பட்டனர். ஒரு ஜெர்மன் சப்மரீன் மூழ்கடிக்கப்பட்டதாக பாரிஸ் செய்தி கூறுகிறது. சென்ற சில தினங்களில் மொத்தம் 8 சப்மரீன்கள் மூழ்கடிக்கப்பட்டன.

**ஹாலந்துப் படையெடுப்பு நிறுத்தப்பட்டது**

நவம்பர் மாத ஆரம்பத்தில் ஹிட்லர் ஹாலந்து மீது படையெடுக்கத் திட்டம் போட்டிருந்தார். ஆனால் குறித்த சமயத்திற்கு 4 மணி நேரத்துக்கு முன்னால் நடைபெற்ற அந்தரங்கக் கூட்டத்தில் சேனைத் தலைவர்கள் படையெடுப்பை ஆதரிக்காததால் அது கைவிடப்பட்டதாக ஜெர்மன் எல்லைப்புற நிருபர் அறிவித்திருக்கிறார்.

(5-ம் பக்கம் பார்க்க)

## காரைக்குடி பஞ்சாயத்துக்கோர்ட்டு

1939-ஹூ சூட் நெ. 1.

ஜானகிராம் கம்பெனி புரோப்ரைட்டர் கே. ஆளவந்தார் நாயுடு — வாதி
க. தெ. அரு. லெக்ஷ்மணன் செட்டியார் — பிரதிவாதி

பிரதிவாதிக்கு அறிவிப்பதாவது:—

வாதி உமதுபேரில் ரூ 26-7-3க்கு பிராது செய்திருப்பதில் உமக்கு சமன்கள் பலமுறை ரெங்கோன் வகையறா இடங்களுக்கு அனுப்பியும் சமன்கள் சார்வாகாததினால் ஷை பிராதை முடிவுசெய்ய 21—12—39உ வாய்தா போட்டிருக்கிறது. அன்று பகல் 2 மணிக்கு நம் முன்பாக ஆஜராக வேண்டியது. தவறினால் எக்ஸ்பார்ட்டியாக முடிவுசெய்யப்படும்.

PN. M. M. PL.
Venkatachalam Chettiar
28-11-39. President.

## நடப்புவட்டி விகிதங்கள்

| மாதம் | நாள் | சென்னை | ரேங்கூன் | [illegible] | சிங்கப்பூர் | செய்கோன் |
|---|---|---|---|---|---|---|
| வேகுதான்ய-ஐப்பசி | 31 | 0-5-6 | 0-4-0 | 0-4-6 | 0-4-3 | 0-4-0 |
| கார்த்திகை | 30 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| மார்கழி | 30 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| தை | 29 | 0-6-0 | 0-4-6 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| மாசி | 29 | 0-6-6 | 0-4-9 | 0-4-6 | 0-4-3 | 0-4-0 |
| பங்குனி | 30 | 0-6-6 | 0-5-0 | 0-4-6 | 0-4-3 | -4-0 |
| பிரமாதி சித்திரை | 31 | 0-6-0 | 0-5-0 | 0-4-6 | 0-4-3 | 0-4-0 |
| வைகாசி | 31 | 0-6-6 | 0-4-6 | 0-4-6 | 0-4-3 | 0-4-0 |
| ஆனி | 31 | 0-6-6 | 0-4-0 | 0-4-6 | 0-4-3 | 0-4-0 |
| ஆடி | 31 | 0-6-8 | 0-4-0 | 0-4-6 | 0-4-3 | 0-4-0 |
| ஆவணி | 32 | 0-6-0 | 0-4-0 | 0-4-6 | 0-4-3 | 0-4-0 |
| புரட்டாசி | 30 | 0-5-6 | 0-4-0 | 0-4-6 | 0-4-3 | 0-4-0 |

## விஞ்ஞானம்

தாவரங்கள் உணர்கின்றன; அவற்றிற்கு இருதயத் துடிப்பு உண்டு; அவை காய முற்றால் அதனாலேற்படும் துன்பத்தையும் உணர்கின்றன என்றெல்லாம் காலஞ் சென்ற ஸர் ஜே. ஸி. போஸ் சொன்ன போது, பல விடங்களிலிருந்தும் இதற்கு எதிர்ப்பு ஏற்பட்டது. அவரது கூற்றை அடிப்படையாகக் கொண்டு காலிபோர்னியாவைச் சேர்ந்த ஹாஜன் ஸ்மித் என்பவர் ஆராய்ச்சி நடத்தி தாவரங்கள், தங்கள் காயங்களை ஒருவித திரவகப் பொருளால் எப்படி குணப்படுத்திக் கொள்கின்றன என்பதை நிரூபித்து விட்டார்.

O

ஒரு கோப்பை நிறையவுள்ள அணுக்களை உடைத்து, அவற்றினின்றும் வெளிப்படும் சக்தியைக் கொண்டு வண்டிகளை ஓட்ட வேண்டுமென்பது பல விஞ்ஞானிகளின் ஆசை. ஆனால் அது இன்னும் மனக்கோட்டையாகவே இருந்து வருகிறது. இதற்கிடையில் ரோமாபுரியைச் சேர்ந்த டாக்டர் என்ரிக்கோ பெர்மி என்பவர் ஒரு உலோகத்தை இன்னொரு உலோகமாக மாற்ற முடியுமென்பதைத் தமது ஆராய்ச்சியின் பயனாகக் கண்டு பிடித்து விட்டாராம். அலுமினியத்தை அவரது முறைப்படி ஒரு கண்ணாடிக் குழாய்க்குள் போட்டு மின்சாரத்தைப் பாய்ச்சி அதன் அணுக்களைத் தாக்கியபோது, சோடியம், மெக்னீஷியம் என்ற உலோகப் பொருள்கள் உண்டாயினவாம்.

O

மனிதனது வயிற்றுக்குள் சாதாரணமாக உண்டாகும் புழுக்களில் 'நாடா' ப்புழுவும் ஒன்று. இந்தப் புழுக்களாக மாறும் கிருமிகள், காய்கறிகள் மூலமே வயிற்றுக்குள் செல்கின்றன. இவற்றைக் கொல்ல ஒருவித எண்ணெயை உட்கொள்ளுகிறார்கள். வேறு நல்ல எளிதான, இனிப்பான மாற்று மருந்து உண்டா என்று இரண்டு விஞ்ஞானிகள் ஆராய்ச்சி செய்து கடைசியாக, இந்தியாவில் கையாளப்படும் முறையே சாலச் சிறந்ததென்ற முடிவுக்கு வந்துள்ளனர். கிருமியைப் போக்கடிக்க அன்னாசிப் பழரசம் சிறந்தது. இந்த ரசத்தில் புழுக்கள் விழுந்த உடனேயே மாண்டுபோகின்றன.

O

சில நோய்களைக் குணப்படுத்த முன் காலத்தில் கிரேக்கர்கள், அட்டைகள் மூலம் நோயாளியின் இரத்தத்தை உறுஞ்சி வெளிப்படுத்தும் முறையைக் கையாண்டதாகத் தெரிகிறது. பிற்காலத்தில் இம்முறை முற்றும் கைவிடப்பட்டது. தற்பொழுது, அமெரிக்காவிலிருக்கும் ஜர்மன் விஞ்ஞானி இம்முறையைக் கையாண்டு பதினாறு பேர்கட்குக் குடல் அனுபந்த நோயைக் குணப்படுத்தியுள்ளாராம். 10 அட்டைகளைப் பிடித்து, வயிற்றின் விலாப் பக்கத்தில் கடிக்கவிட்டார். துரிதமான குணம் ஏற்பட்டது. ஆபரேஷன் தேவைப்படவில்லை. எல்லா நோயாளிகளும் சொஸ்தமடைந்தனர்.

O

புழுப் பூச்சிகளால் ஏராளமான பயிர் பச்சைகளுக்கும் தானியங்களுக்கும் நாசம் ஏற்பட்டு வருகிறது. காலிபோர்னியா யூனிவர்ஸிட்டியைச் சேர்ந்த பிரிக்ஸ் என்ற நிபுணர், புழு, பூச்சிகளால் சேதமடையாத கோதுமையைக் கண்டு பிடித்து விட்டதாகத் தெரிவித்திருக்கிறார். இதனால் ஏக்கர் ஒன்றுக்கு விளையும் கோதுமையின் அளவும் அதிகரிக்குமாம். இந்த நூதனக் கோதுமையை அவர் பல விதக் கலப்பு முறையால் தயாரிக்கிறார்.

O

கப்பல்கள் கட்டுவதற்குப் போதுமான இரும்பு கிடைப்பது கஷ்டமாக இருப்பதால், தனி காங்கிரீட்டினால் கப்பல் கட்ட முடியுமா என்பதுபற்றி பிரிட்டனில் பரிசீலனை செய்துவருகிறார்கள். இதனால் செலவும் சுருங்குவதோடு, கப்பல் கட்டப் பிடிக்கும் காலமும் குறையும்; சாயம் பூச வேண்டியதில்லை. சுத்தம் செய்யவேண்டிய அவசியமும் ஏற்படாதாம்.

---

அமெரிக்கா தற்பொழுது மாதம் 1,250 விமானங்கள் வீதம் தயாரிக்க முடிகிறது; சென்ற வருஷத் தயாரிப்பைப் போல் இது நாலுமடங்காகும்.

## மதிப்புரை

### லெனின்

[ஆசிரியர்: ஸ்ரீ வி. கிருஷ்ணஸ்வாமி எம். ஏ. கிடைக்குமிடம்: நவயுகப் பிரசுராலயம் லிமிடெட், ஜி. டி. மதராஸ். பக்கங்கள்: 157. விலை: 8 அணா.]

பிறருடைய வாழ்க்கைச் சரித்திரங்களைப் படித்து நம்முடைய வாழ்க்கையைச் சரிப்படுத்திக் கொள்ளவேண்டும். பெரியோர்களைச் சுயசரிதம் எழுதும்படி பிறர் தூண்டுவது இதற்காகவே. பெரியோர்கள் சரித்திரத்தைப் பிறர் எழுதுவதும் இந்த நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டேதான். தேசச் சரித்திரங்களையும், வாழ்க்கைச் சரித்திரங்களையும் படித்துணர்வதால் அரிய விஷயங்கள் பலவற்றைத் தெரிந்துகொள்ள முடிகிறதென்பதை அனுபவித்தோருணர்வர். மணிக்கொடி பிரசுரத்தின் 8 வது மலராகிய "லெனினை" மகிழ்ச்சியுடன் வரவேற்கிறோம். முதல் அத்தியாயத்தில் பொது உடமையின் தத்துவம் சுருக்கமாகவும் நன்றாகவும் விளக்கப்படுகிறது. மற்ற அத்தியாயங்கள் லெனினுடைய சரித்திரத்தை தொடர்ச்சியாகச் சொல்லுகின்றன. கடைசி இரண்டு அத்தியாயங்களில் லெனினைப்பற்றி ஸ்டாலினும், கோர்க்கியும் எழுதிய கருத்துக்கள் காணப்படுகின்றன. தம் தேசத்திற்காக, தம் மக்களுக்காக லெனின் எவ்வளவு அல்லலுக்குள்ளானார் என்பதும், 1917ல் ரஷ்யாவில் நடந்த புரட்சியும் இதில் விவரமாகத் தரப்படுகின்றன. புரட்சி வீரரான லெனினுடைய சரித்திரத்தை ஒவ்வொருவரும் அவசியம் படிக்கவேண்டும். சரளமான நடையில் எழுதப்பட்டிருக்கிறது. லெனின், அவருடைய மனைவியார் முதலியோரின் படங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

O

### திருநீலகண்ட போதம்

[ஆசிரியர்: திருவனந்தபுரம், காமனை ஸ்ரீ நீலகண்ட தாசர் சுவாமி. பக்கங்கள்: 600. விலை ரூபாய் 2. கிடைக்குமிடம்: ஸ்ரீ ராமவிலாஸ் புத்தகசாலை திருவனந்தபுரம்.]

இப்புத்தகத்தின் ஆசிரியரான காலஞ்சென்ற ஸ்ரீ நீலகண்டதாசர் சுவாமி திருஞான சம்பந்தமூர்த்தியின் பிற்காலத்தவர் என்று முகவுரையில் கூறப்படுகிறது. தேவாரம், தாயுமானார் பாடல் போன்ற யாப்பில் சிவபெருமானைப் போற்றிப் பல தத்துவங்களைக் கொண்டு இந்நூல் விளங்குகிறது. கரடுமுரடான பாஷையில்லாமல் நல்ல நடையில் பாக்கள் ஆக்கப்பட்டிருக்கின்றன. இசையுடன் பாடுதற்கேற்ற முறையில் பண்களும் குறிக்கப்பட்டிருக்கின்றன.

---

ஸோவியத் ருஷ்யாவின் ஜனத்தொகை 1926ல் சுமார் 15 கோடியிலிருந்து 1939ல 17 கோடியாக உயர்ந்திருக்கிறது.

### கவர்ன்மெண்டு ஸ்தல ஆஸ்பத்திரி, இராமநாதபுரம்

## விளம்பரம்

இராமநாதபுரம் கவர்மெண்ட் தலைமை ஸ்தல ஆஸ்பத்திரிக்கு 1940-41 (1940-ளு ஏப்ரல்-மீ 1-ந்தேதி முதல் 1941-ளு 'மார்ச்-மீ 31-ந்தேதி முடிய) வருஷத்திற்கு வேண்டிய ஆகாராதி சாமான்களும், இதர சாமான்களும் சப்ளை செய்வதற்காக டெண்டரால் 1940-மீ ஜனவரி-மீ 8உ திங்கட்கிழமை பகல் 2-மணி வரை ஏற்றுக்கொள்ளப்படும். மற்ற விபரங்களுக்கு ஷை இராமநாதபுரம் கவர்மெண்ட் ஸ்தல ஆஸ்பத்திரி சூப்பரிண்டெண்டாருக்கு எழுதவும்.

B. தயாநந்த ருவ்,
(காப்டன்)
23-11-39. சூபரின்டேன்டன்ட்.





# ஹிட்லரை வீழ்த்த ஜர்மனியில் புரட்சி

## நாஜி எதிர்ப்புக் கட்சியின் செல்வாக்கு வளருகிறது

### "ராவல்பிண்டி" மூழ்கடிக்கப்பட்டது

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

**ஹிட்லரை வீழ்த்தப் புரட்சி?**

மார்ஷல் கோயரிங் தலைமையில் நடைபெற்ற தற்காப்பு சபைக் கூட்டத்தில் வாலிப நாஜிகளிடையே அதிருப்தி ஏற்பட்டு வருவதுபற்றி மாகாண கவர்னர்கள் புகார் செய்தனராம். தொழிலாளர்கள் இயந்திரங்களை நாசஞ் செய்வதாயும், சாத்வீக எதிர்ப்பு முறையைக் கையாள்வதாயும், நாஜி எதிர்ப்புக்கட்சியின் செல்வாக்கு அதிகரித்து வருவதாயும் சொல்லப்பட்டது. நிலக்கரிச் சுரங்கங்களுள்ள ரூர் பிரதேசம் நாஜி எதிர்ப்புக் கோட்டையாக இருக்கிறதாம்.

மியூனிச் பீர் கடை விபத்தில் ஹிட்லரைக் கொல்ல முயற்சிக்கப்பட்டது. இதற்கு முன் ஏற்கனவே இரு முறை அவர் உயிருக்கு உலைவைக்க முயற்சிகள் நடந்ததாக ஒரு ஸ்வீடிஷ் பத்திரிகை தெரிவிக்கிறது. சென்ற ஜனவரி மாதம் ஒரு சதி செய்யப்பட்டதாயும், அதில் 10 பேர் கைது செய்யப்பட்டனரென்றும், சென்ற ஆகஸ்டு மாதம் கண்டு பிடிக்கப்பட்ட மற்றொரு சதியில் 100 பேர் கைது செய்யப்பட்டதாயும் அப் பத்திரிகை கூறுகிறது. சென்ற சில வாரங்களில் நாஜிப் படையையும் ரகசியப் போலீசையும் சேர்ந்த பலர்மீது தேசத்துரோகக் குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது.

**சுரங்க வெடிகளுக்கு மாற்று**

யார்க் ஷயர் கடற்கரையில் 200 ஜெர்மன் சுரங்க வெடிகள் ஒதுக்கப்பட்டிருந்தனவாம். இந்தமாதிரி பாரசூட் மூலம் சுரங்க வெடிவைக்கும் முறைக்கு மாற்றுக் கண்டு பிடிக்க பிரிட்டிஷ் நிபுணர்கள் யோசித்து வருவதாகத் தெரிகிறது.

**ரூஸ்வெல்ட் நம்பிக்கை**

இன்று அமெரிக்க குடியரசுத் தலைவர் பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் பேசுகையில் யுத்தம் அடுத்த மார்ச் மாதத்திற்குள் முடிந்து விடுமெனத் தாம் நம்புவதாகத் தெரிவித்தார். ஆனால் இந்நம்பிக்கைக்குரிய ஆதாரங்களை அவர் வெளியிடவில்லை.

**வெளியேறுகின்றனர்**

நாஜித் தலைவர்களின் மனைவியர் பலர் ஜெர்மனியைவிட்டு ஒருவர் பின் ஒருவராக வெளியேறுவதாக ஒரு ஜெர்மன் ரேடியோச் செய்தி தெரிவித்திருக்கிறது. ரிப்பன் டிராப்பின் மனைவி பிரேஸிலுக்குப் போய்விட்டாராம்.

**இந்தியாவுக்கு 8000 துருப்புகள்**

யுத்த காலத்தில் இந்தியாவில் சேவை புரிய 8000 துருப்புகளை நேப்பாள சர்க்கார் வழங்க முன்வந்துள்ளனர்.

### 25உ சனி

வெளி நாட்டில் சேவை செய்ய ராணுவ ஊழியப் படைக்கு 8000 தொண்டர்கள் உடனே தேவையென்று லண்டன் யுத்த ஆபீஸ் தெரிவித்திருக்கிறது.

ஜெர்மனி தனது ராணுவத்தில் ஏராளமான போலந்துக் கைதிகளைச் சேர்ப்பதாகச் சொல்லப்படுகிறது.

10,000 டன் எடையுள்ள 'பெல்பாஸ்ட்' என்ற பிரிட்டிஷ் குருய்ஸர் போர்த் நதி முகத்துவாரத்தில் ஒரு டார்ப்பிடோ குண்டினால் சேதப்பட்டது. 20 பேர் காயமுற்றனர்.

**கிழக்கிலும் அரண்**

ஜர்மனியின் கிழக்குப் புற எல்லையில் ஸ்லவேகியாவிலிருந்து பால்டிக் கடல் வரை சீக் பிரட் அரண் போன்று ஒரு அரணைக் கட்ட ஹிட்லர் யோசித்து வருவதாகத் தெரிகிறது.

கடற் சுரங்க வெடிகளை வைத்து நடத்தும் போர் முறையை அதி தீவிரமாகக் கையாளும்படி ஹிட்லர் உத்தரவிட்டிருக்கிறாராம். இது மிகச் சக்தி வாய்ந்த ஆயுதமென அவர் கருதுகிறார். ஆனால், இந்தச் சுரங்க வெடிகளைக் கண்டு பிடிக்கவும், அழிக்கவும் ஒரு நூதன முறையைப் பிரிட்டிஷ் கடற் படை அதிகாரிகள் கண்டு பிடித்துவிட்டதாக ஒரு பாரிஸ் செய்தி கூறுகிறது.

ஜெர்மன் சரக்குகள் ஜப்பானுக்கு ஏற்றுமதியாவதை பிரிட்டன் தடுத்து அதன் மூலம் ஜப்பானுக்குப் பாதகம் ஏற்பட்டால், ஜப்பான் பதில் நடவடிக்கையெடுக்குமென்று ஜப்பானிய அதிகாரி ஒருவர் தெரிவித்திருக்கிறார்.

3 ஜெர்மன் சாமான் கப்பல்களை நேச தேச யுத்தக் கப்பல்கள் பிடித்துவிட்டதாக ரோம் ரேடியோச் செய்தி தெரிவிக்கிறது. நவம்பர் 18உ எதிரிகளிடமிருந்து தப்பி யோடிய ஜெர்மன் கப்பல் பிடிபடுவதைத் தவிர்க்கத் தன்னைத்தானே மூழ்கடித்துக்கொண்டது. லாங்லீ தீவுக் கருகில் ஜெர்மன் சுரங்க வெடிமீது ஜெர்மன் பாராக் கப்பலொன்று மோதி 3 நிமிஷத்தில் மூழ்கிவிட்டது.

### 26உ ஞாயிறு

பி அண்டு ஒ கம்பெனியின் 'சசக்ஸ்' என்ற 11000 டன் கப்பல் சுரங்கத்தில் மோதிச் சேதமடைந்தது. பழுது பார்க்குமிடம் கொண்டுபோகப்பட்டிருக்கிறது. பிரிடானிக் என்ற பின்லண்டு கப்பல் ஸ்வீடன் கடற்கரைக் கருகில் பால்டிக் கடலில் ஜெர்மானியரால் பிடிக்கப்பட்டது. அமெரிக்காவுக்குச் சரக்கேற்றிச் சென்ற பல நடுநிலைமைத் தேச சாமான் கப்பல்களை ஜெர்மனி விடுவித்துவிட்டது. இவற்றிலுள்ள சரக்குகளை போர் புரியும் நாடுகளுக்குத் திருப்பி ஏற்றுமதி செய்யவில்லையென்று அமெரிக்கா உறுதியளித்த பிறகே அவை விடுதலை பெற்றனவாம்.

ஸ்வீடன் தேச எண்ணெய் கப்பலொன்று நேற்றிரவு பிரிட்டனின் வடக்கு கடற்கரைக்கு எதிரிலுள்ள சமுத்திரத்தில் ஒரு சுரங்க வெடி மீது மோதி சேதமுற்றதாக ஆம்ஸ்டர்டாம் செய்தி கூறுகிறது. 1436 டன் எடையுள்ள, காகிதம் ஏற்றிச்சென்ற பின்லந்துக் கப்பலை ஜெர்மானியர் பிடித்துக்கொண்டனர்.

**'ராவல்பிண்டி' மூழ்கிற்று**

முன் பி. அண். ஓ. கம்பெனிக்குச் சொந்தமாக இருந்த பிரயாணிகள் போக்குவரத்துக் கப்பலான 'ராவல்பிண்டி' (17000 டன்) வியாபாரக் குருய்ஸராக இருக்கிறது. இது மூழ்கடிக்கப்பட்டு விட்டதாக பிரிட்டிஷ் கடற்படை மந்திரி அறிவித்திருக்கிறார். இதிலிருந்த 300 மாலுமிகளில் 17 பேரே உயிர்தப்பியிருக்கக் கூடுமென்று அனுமானிக்கப்படுகிறது.

**ஸோவியத் படை தாக்கப்பட்டது**

சோவியத்—பின்லாந்து துருப்புகள் ஸோவியத் துருப்புகள் மீது பீரங்கிப் பிரயோகம் செய்ததாக சோவியத் அறிக்கை கூறுகிறது. இதுபற்றி விசாரணை செய்ய ஒரு ருஷ்ய அதிகாரி அவ்விடம் சென்றிருக்கிறார். இச் சம்பவத்தின் காரணமாக 4 பேர் கொல்லப்பட்டனர்.

### 27உ திங்கள்

பில்ஸுட்ஸ்கி யென்ற 14000 டன் எடையுள்ள போலிஷ் கப்பல் பிரிட்டனுக்கு வடமேற்கேயுள்ள கடலில் டார்ப்பிடோ குண்டினால் மூழ்கடிக்கப்பட்டது. யுத்தம் ஆரம்பமானது முதல் இது பிரிட்டிஷ் கடற்படையில் சேர்ந்திருந்தது. இதிலிருந்து 171 பேர் மீட்கப்பட்டனர். 3 பேர் இறந்தனர். 3 பேர் காணப்படவில்லை. வில்லியம் ஹம்பயர்ஸ் என்ற பிளீட்வுட் மீன் பிடிக்கும் கப்பல்மீது சப்மரீன் குண்டுகளைப் பொழிந்தது. 13 பேர் படகில் ஏறிச் சென்றனர். செவ்வாய்க்கிழமை முதல் அவர்கள் காணப்படவில்லையாம்.

ஜெர்மன் ஆதிக்கத்திலுள்ள போலிஷ் மாகாணங்களிலிருக்கும் போலிஷ் மக்கள் அப்பிரதேசங்களை விட்டுக் காலி செய்துவிட வேண்டுமென நாசித் தலைவர் ஹொர் பார்ஸ்டர் எச்சரிகை விடுத்திருக்கிறார்.

**அதிகாரிகள் அறிக்கை**

"ராவல் பிண்டி" மூழ்கினது சம்பந்தமாகப் பிரிட்டிஷ் கடற்படை மந்திரி காரியாலயத்தார் வெளியிட்டிருக்கும் அறிக்கையில், "ராவல் பிண்டி," இரண்டு ஜர்மன் கப்பல்களுடன் ஏககாலத்தில் போராடிக் கடைசியில் நெருப்புபற்றி எரிந்து, தப்பினவர் போக மீதிப்பேர்களுடன் மூழ்கிப் போயிற்றென்றும், 'சித்ரால்' என்ற பிரிட்டிஷ் குருய்ஸர் எதிரி கப்பல்களைத் தேடிச் சென்றதாயும் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

**டச்சுக் கப்பல் மூழ்கியது**

தென் அமெரிக்காவிலிருந்து ராட்டர்டாமுக்குச் சென்று கொண்டிருந்த "ஸ்பார்ன்டாம்" எனும் டச்சுக் கப்பல் தேம்ஸ் நதி முகத்துவாரத்தில் ஒரு சுரங்க வெடிமீது மோதி எரிந்து போயிற்று. 40 மாலுமிகள் படகில் ஏறிதப்பினர். 5 பேர் இறந்தனர்.

சென்ற வாரம் மொத்தம் 17 பிரிட்டிஷ் கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டன.

**ஜர்மன் கப்பல்கள் பிடிபட்டன**

ஜெர்மன் வியாபாரக் கப்பலான "போர்கம்" என்ற கப்பல் பிரிட்டிஷ் கப்பலால் பிடிக்கப்பட்டு துறைமுகத்தை நோக்கிக் கொண்டு வரப்பட்ட போது, ஒரு ஜர்மன் சப்மரீன் பிடிபட்ட ஜர்மன் கப்பலைத் தாக்கி அதை தீப்பற்றி எரியும்படி செய்தது. கோன்ஸல் ஹென்றிக் பிஷர் என்ற ஜர்மன் வியாபாரக் கப்பல் பிரிட்டிஷ் யுத்தக்கப்பலால் பிடிக்கப்பட்டது.

ராய்ல்டன் கிரேஞ்ச் என்ற கப்பல் அட்லாண்டிக் சமுத்திரத்தில் எதிரிகளால் மூழ்கடிக்கப்பட்டது. உயிர்ச் சேதமில்லை.

'ஹெலினா' எனும் சுவிஸ் கப்பல் இங்கிலீஷ் கால்வாயில் சுரங்க வெடிமீது மோதியதாக ஜெர்மன் செய்தி கூறுகிறது. இது சம்பந்தமாக ஸ்வீடிஷ் சர்க்கார் தங்கள் கண்டனத்தைத் தெரிவித்திருக்கின்றனர்.

(8-ம் பக்கம் பார்க்க)

### காரைக்குடி பஞ்சாயத்துக் கோர்ட்டு

1939-ளு சூட் நிர் 115.

| | |
|---|---|
| சே. நா. சே. நாராயணசாமி செட்டியார் | வாதி |
| கா. பி. சையது அப்துல்லா ருவுத்தர் 1 | பிரதிவாதிகள். |
| கா. பி. பீர்முகம்மது ருவுத்தர் 2 | |

1-ம் பிரதிவாதிக்கு அறிவிப்பதாவது:-

வாதி உங்கள் வகையறு பேரில் ரூ 46-9-4க்கு தாவா செய்திருப்பதில் உமக்கு சமன்கள் பலமுறை அனுப்பியும் சார்வாகாததினால் ஷை பிராதை முடிவு செய்ய 7-12-39உ வாயிதா போட்டிருக்கிறது. அன்று பகல் 2-மணிக்கு நம் முன்பாக நீங்கள் ஆஜராக வேண்டியது. தவறினால் எக்ஸ் பார்ட்டியாக முடிவு செய்யப்படும்.

PN. M. M. PL.
Venkatachalam Chettiar,
27-11-39. President.

# குமரன்

காரைக்குடி

பிரமாதி-ஞு கார்த்திகை-மீ 15-உ


## வகுப்பு ஒற்றுமைக்கு வழி

நமது நாட்டின் தலைவிதி வகுப்புப் பிரச்னையைப் பொறுத்து நின்று தவிக்கிற தென்னலாம். அந்நாள் தொட்டு இந்நாள் வரை வகுப்புணர்ச்சியினுலேயே சீரழிந்து வந்திருப்பது சிறிது சிந்திப்பார்க்கும் புலனுகும். மதமும் ஜாதியும் எதிரிகளின் கையாயுதங்களாகி வந்திருக்கின்றன. ஜாதி வகுத்த முறையே பிளவும் நாசமும் நோக்கமாகக் கொண்டது. தேச ஒற்றுமை கெட்டுச் சுயநலக்காரர் பெருத்து வலிமைபெற இடமளித்தது இந்த ஜாதிப் பிரிவினையேயாகும். இங்கே ஜாதிபேதத்தை நீர்விட்டு வளர்க்கச் சில குழுவினரே இருந்திருக்கின்றனர். ஜாதிபேத நஞ்சு மக்கள் அறிவையும் முயற்சியையும் ஊக்கத்தையும் உணர்ச்சியையும் வாழ்க்கையையும் பாழாக்கி உயர்ந்து நிற்கிறது.

தேச விடுதலையை வேண்டி நிமிர்ந்து நிற்கும் இந்நாட்டாருக்கு பிரிட்டிஷார் கூறியிருக்கிற பதில் "நீங்கள் ஒற்றுமையடையுங்கள்; பிறகு எங்களைக் கேளுங்கள்" என்பதாகும். காங்கிரஸ் "எங்களை வெட்டி விடுங்கள், நாங்கள் பார்த்துக் கொள்கிறோம்" என்றது காங்கிரஸ் வேண்டுகோள் செல்லவில்லை. செல்லுமா?

காங்கிரஸ் அகில இந்தியாவும் ஒப்புக் கொண்ட ஸ்தாபனமல்லவென்று பலகுரல்கள் கிளம்பின. முஸ்லிம்களின் ஒலியே பெரிதாயிற்று. அதனை அரசாங்கத்தார் தாங்கினர். அவ்வொலியை எவரும் அலட்சியஞ் செய்யவும் முடியவில்லை. அதைத் தொடர்ந்து பல ஒலிகள் தோன்றலாயின. இந்த நிலைமையில் காங்கிரஸ் கமிட்டி கூடிச் செய்துள்ள முடிவு சாலச் சிறந்ததாகும். தேசமானது ஒத்துழையாமையைத் தீவிரமாகச் செய்யத் தயாராக இருக்கவில்லையென்று கருதுவதில் பிழையில்லை. ஆனல் சரியான ஒத்துழைப்புக்கு இடமில்லாவிட்டால் ஒத்துழைக்க முடியாதென்பதை மந்திரி சபைகளின் ராஜிநாமா மூலம் காங்கிரஸ் காட்டியிருக்கிறது. இதற்கு மேல் நடைபெற்ற நிகழ்ச்சிகளிலிருந்து வகுப்பு ஒற்றுமைக்கு வழி செய்வது இன்றியமையாததென்று காங்கிரஸ் கமிட்டி கருதியது குறிப்பிடத்தக்கது. இதற்குக் காங்கிரசையே கொண்டு முடிவு செய்வது சுலபமன்று. எனவே அரசியல் நிர்மாண சபை ஒன்றை ஏற்படுத்துவதென்று காரியக் கமிட்டி தீர்மானித்திருக்கிறது. இந்த சபை வெற்றிகரமாக அமைதல் வேண்டும். இதுவரை இந்த நாட்டில் வகுப்புப் பிரச்னையைத் தீர்க்க முற்பட்ட போதெல்லாம் இன்னுமொரு வகுப்பு அதிகப்படுவதாகவே முடிந்திருப்பதை நினைக்க அஞ்சவேண்டியிருக்கிறது. ஆனல் இப்படிப்பட்ட நெருக்கடியில் அரசியல் அடிப்படையில் ஏற்பட இருக்கும் ஒற்றுமை முயற்சி பயனளிக்கு மென்று நம்பலாம்.

இதனைப்பற்றி மகாத்மா 'ஹரிஜ'னில் விளக்கமாக ஒரு கட்டுரையை வெளியிட்டிருக்கிறார். வகுப்பு வாதம் காங்கிரசுக்குப் புறம்பு. ஆனல் வகுப்புவாத உணர்ச்சியைப் போக்க ஒரு வகுப்புவாதத்தைக் கையாள வேண்டிய நிலைமை வந்துவிட்டது. முஸ்லிம் வகுப்பாருக்குத் தனித் தொகுதியும், ஹிந்துக்களில் சிறுபான்மையினருக்குத் தக்கபடி தனி ஸ்தானங்களும் கொடுக்கலாமென்ற உத்தேசம் இருந்து வருவதாகத் தெரிகிறது. இதுதான் இப்பொழுதுள்ள மாகாணச் சட்டசபை முறை. இதையொட்டியே இந்த அரசியல் நிர்மாண சபை அமைக்கப்படுமென்று தெரிகிறது. எனினும் வகுப்பு உணர்ச்சியும் தங்கள் வகுப்புக்கு நலன் செய்ய வேண்டுமென்ற ஒரு மாதிரியான சுயநல நோக்கமும் இதிலிருந்து பெருகத்தான் செய்யும். ஆனல் வேறு ஒற்றுமைக்கு நல்ல வழியும் காலமும் வரும் வரை இதைக் கையாள வேண்டியதுதான் என்ற நிலையில் காரியக்கமிட்டி முடிவு செய்திருக்கிறது போலும்.

---

### ஜீவஹிம்ஸை நிவாரண சங்கம்
#### காரைக்குடியில் ஆரம்பம்

சென்ற செவ்வாய்க்கிழமை மாலை 5-30 மணிக்கு காரைக்குடி முனிசிபல் கவுன்சில் ஹாலில் தேவகோட்டை சப் கலெக்டர் ஸ்ரீ எம். எஸ். சிவராமன் எம். ஏ., ஐ. சி. எஸ். அவர்கள் தலைமையில் மிருகங்களின் ஜீவஹிம்ஸையைத் தடுப்பதை முன்னிட்டு ஜீவஹிம்ஸை நிவாரண சங்கத்தின் கிளை ஸ்தாபனம் ஒன்று காரைக்குடியில் நிறுவப்பட்டது. தலைவர் அவர்கள் மேற்படி சங்கம் காரைக்குடியில் அவசியம் என்றும் அதற்காக ஏற்படுத்தியுள்ள சட்டங்களை விளக்கியும், காரைக்குடி பொதுஜனங்கள் இதை மிகவும் ஆதரிக்கவேண்டும் என்றும் சொன்னர்கள். பின்னர் தேவகோட்டை ஜாயிண்டு மாஜிஸ்டிரேட் அவர்கள் தலைவராகவும், காரைக்குடி டாக்டர் எஸ். சாரி அவர்கள் காரியதரிசியாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டு நகரசபைத் தலைவர் முனிசிபல் கமிஷனர், ஹெல்த் ஆபீசர், மிருக ஆஸ்பத்திரி டாக்டர், போலீஸ் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் இவர்களுடன் இன்னும் 16 பேர்க்கொண்ட கமிட்டியொன்றும் ஏற்படுத்தப்பட்டது. கூட்டத்திற்கு நகரப் பிரமுகர்கள் பலர் விஜயஞ் செய்திருந்தனர். ஸ்ரீ ஆறு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் வந்தனோபசாரம் கூற அக்கிராசனதிபதி முடிவுரையுடன் கூட்டம் இனிது கலைந்தது.

---

### ராஜ்கோட் சீர்திருத்தம்
#### ஒத்துழையாமை அனுஷ்டிக்க மகாத்மா யோசனை

ராஜ்கோட்டில் புதிதாக அளிக்கப்பட்டிருக்கும் சீர்திருத்தத்தால், முன்னிருந்த நன்மைகளும் போய் விட்டனவாகையால், சீர்திருத்தத்தை ஏற்றுக் கொள்ளாமல் ஒத்துழையாமையை அனுஷ்டிக்கும்படி மகாத்மா ராஜ்கோட் பிரஜைகளுக்கு யோசனை கூறியிருக்கிறார். 15 வருஷங்களாக, வயது வந்தவர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த ஓட்டுரிமையும் புதிய சீர்திருத்தத்தினல் ரத்தாகிவிட்டது. இப்போது ஓட்டுரிமைக்கு சொத்துரிமையும் வாசஸ்தல உரிமையும் யோக்கியதைகளாக விதிக்கப்பட்டிருக்கின்றன. தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவருக்குப் பதில், திவான் நிரந்தரத் தலைவராகி விட்டார். முன் சட்டசபையில் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் மட்டும் இருந்தது போய், இப்பொழுது நியமன அங்கத்தினர்களும் இடம் பெற்றுவிட்டார்கள். சட்டசபையின் அதிகாரம் குறைந்துவிட்டது. இனி திவான் வைத்ததே சட்டம். இந்த சீர்திருத்த அமுல் விஷயத்தில் ராஜ்கோட் வாசிகள் கலந்து கொள்ளாமல், சற்று பொறுத்திருந்து, பிரார்த்தனையுடன் நூல் நூற்று வரவேண்டுமென்று மகாத்மா தமது கட்டுரையில் குறிப்பிட்டிருக்கிறார்.

---

### பாராட்டுக் கூட்டம்

நவம்பர் 23-உ மாலை 6 மணிக்கு காரைக்குடி காங்கிரஸ் மாளிகையில், திருப்பத்தூர் தாலூகா காங்கிரஸ் காரியதரிசியாயிருந்து தற்சமயம் அயல்நாடு செல்லும் குன்னக்குடி ஸ்ரீ பி. எம். கிருஷ்ணன் அவர்களுக்கு டாக்டர் ஸ்ரீ எஸ். சுப்பிரமணியம் (ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவர்) அவர்களின் தலைமையில் பாராட்டுக் கூட்டம் நடைபெற்றது. பலர் ஸ்ரீ பி. எம். கிருஷ்ணன் அவர்கள் காரியதரிசியாக இருந்து செய்த சேவைகளைப் பாராட்டிப் பேசினர்.

---

## டாக்டர் சுப்பராயன் தம்பதிகள் விஜயம்

டாக்டர் பி. சுப்பராயன் எம். ஏ., பார்-அட்-லா அவர்களும் ஸ்ரீமதி சுப்பராயன் எம். எல். ஏ. (மத்திய அசம்பிளி) அவர்களும் நவம்பர் 18, 19 தேதிகளில் காரைக்குடிக்கு விஜயஞ் செய்வதாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஆனல், மழை காரணமாக ரயில் போக்கு வரத்து தடைப்பட்டதால், அவர்களது விஜயம் ஒத்திவைக்கப்பட்டது. அவர்கள் இருவரும் டிசம்பர் 3, 4 தேதிகளில் இங்கு விஜயஞ் செய்கின்றார்கள். சுற்றுப் பிரயாண விவரம் வருமாறு:—

### 3—12—39 (ஞாயிறு)

காலை 9-50 ரயில்வே ஸ்டேஷனில் வரவேற்பு.
„ 10-30 13-வது வார்டில் முனிசிபல் பெண் பள்ளிக்கூடக் கட்டிடத்திற்கு ஸ்ரீமதி சுப்பராயன் அஸ்திவாரக் கல் நாட்டுவார்.
மாலை 3-00 ஸ்ரீ மீனட்சி பெண் பள்ளிக்கூட ஆண்டு விழா.
„ 7-00 பொதுக்கூட்டம்.
„ 8-00 ஸ்ரீ யம். யஸ். யம். யம். மெய்யப்ப செட்டியார் விருந்து (செஞ்சை பங்களா)

### 4—12—39 (திங்கள்)

காலை 8-30 மெய்யப்பா சிசு சம்ரட்சணை சாலைக்கு விஜயம்.
„ 9-00 செட்டியார்கள் நல உரிமைச் சங்கத்தில், இருவருக்கும் வரவேற்பு. ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் படத்தை டாக்டர் சுப்பராயன் திறந்து வைத்தல்.
„ 10-00 முனிசிபல் ரெஸிடன்ஷியல் ஸ்கூலுக்கு விஜயம்.
„ 10-30 அமராவதிபுதூர் மகளிர் இல்லத்துக்கு விஜயம்.
மாலை 3-00 ராமகிருஷ்ண விவேகானந்த சங்கத்துக்கு விஜயம். பண்டித ஜவாஹர்லால் நேரு படத்தை டாக்டர் சுப்பராயனும், சுப்பிரமணிய பாரதியார் படத்தை ஸ்ரீமதி சுப்பராயனும் திறந்து வைப்பார்கள்.
„ 4-00 பெண்கள் கூட்டம்.
„ 5-00 தேவகோட்டை ரோடு ஜமீன்தார் காலனி டென்னிஸ் கோர்ட்டை டாக்டர் சுப்பராயன் திறந்து வைத்தல்.
„ 5-30 ஸ்ரீ ஏ. யல். ஏ. ஆர். சோமநாதன் செட்டியார் தேநீர் விருந்து.
„ 6-30 காரைக்குடி, ஹிந்துஸ்தான் ஸ்கவுட் அஸோசியேஷன் ஆண்டு விழா (முனிசிபல் கவுன்சில் ஹாலில்)
„ 7-30 செட்டியார்கள் நல உரிமைச் சங்கத்தில் விருந்து.
„ 8-38 காரைக்குடியிலிருந்து புறப்பாடு.

---

### மூவார் செட்டியார்கள் வர்த்தக சங்கம்

இச் சங்கத்தின் ஐந்தாவதாண்டு நிறைவு விழா ஐப்பசி 13உ மாலை 3 மணிக்கு செட்டியார் ஹாலில் மாஜித் தலைவர் திரு வீ. முரு. பெ. பெரியணன் செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தலைவர் முடிவுரைக்குப் பின் மாஜிக் காரியதரிசி திரு லெ. வீர. லெட்சுமணன் செட்டியார் அவர்களால் ஐந்தாவதாண்டு அறிக்கையும் வரவு செலவு கணக்கும் வாசித்து ஒப்புக்கொள்ளப்பட்டன. பின் புது வருஷத்திற்கு, திரு. பெ. சித. வி. அண்ணமலை செட்டியார் அவர்கள் தலைவராகவும், திரு. லெ. வீர. லெட்சுமணன் செட்டியாரவர்கள் உபதலைவராகவும், திரு. சு. மு. ராம. ஆண்டியப்ப செட்டியாரவர்கள் காரியதரிசியாகவும், திரு. சி. மு. அழகப்ப செட்டியார் அவர்கள் உதவிக்காரியதரிசியாகவும், திரு. பள. ப. லெட்சுமணன் செட்டியார் அவர்கள் பொக்கிஷதாராகவும் இவர்களுடன் 12 பேர் நிர்வாக சபை அங்கத்தினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். சங்க மாணவர்களின் சொற்பொழிவுகளுக்குப்பிறகு புதுவருடத்தலைவரின் முகவுரையுடன் கூட்டம் இனிது முடிந்தது.

---

## ரயில்பாதை சீர்ப்பட்டது

மழை காரணமாக புதுக்கோட்டை—மானமதுரை ரயில்பாதையில் பழுதுபட்ட பாகங்கள் சீர்படுத்தப்பட்டு நவம்பர் 24உ மாலை முதல் வழக்கம் போல் வண்டிப் போக்குவரத்து நடைபெற்று வருகின்றது.

மெயின் லைனில் தஞ்சை—திருச்சிப் பிரிவில் பாதை சீர்ப்பட்டு 27உ காலை முதல் நேரான வண்டிப் போக்குவரத்து நடைபெற்று வருகிறது.

---

### சென்னை மேயர்

நவம்பர் 27உ மாலை நடைபெற்ற சென்னை கார்ப்பரேஷன் கூட்டத்தில், மேயருக்கு விசேஷ அதிகாரங்கள் அளிப்பதுபற்றி பலத்த விவாதம் நடைபெற்றது. மேயரை 'மிஸ்டர் மேயர்' என்றழைப்பது, சபைக்குள் வரும்போதும் வெளியே போகும் போதும் மேயருக்குத் தலைவணங்குதல், பிரமாணப் பத்திரம், பாஸ்போர்ட்டு, பென்ஷன் பில்லுகளில் கை யெழுத்துச் செய்வதற்கு கௌரவ மாஜிஸ்திரேட்டுக்குள்ள அதிகாரமளித்தல், மேயரைக் கோர்ட்டுகளில் ஆஜராக நிர்ப்பந்திக்காமலிருத்தல் முதலிய விஷயங்கள் நிறைவேறின. மேயர், விருந்து அளிக்க வருஷந்தோறும் அவருக்கு 1000 ரூபாய் அளிப்பதென்ற விஷயம்பற்றி கடுமையான விவாதம் நடைபெற்று, மேயருக்கென்று, அவருடைய அந்தஸ்துக்கு ஏற்றபடியுள்ள ஒரு மோட்டார் காரை அவரது சொந்த உபயோகத்துக்குக் கொடுப்பதென்று தீர்மானிக்கப்பட்டு டிசம்பர் 5-ந் தேதிக்குக் கூட்டம் ஒத்திவைக்கப்பட்டது. மேயருக்கு ஒரு தனிக் காரியதரிசியை நியமிப்பதென ஏற்கனவே கார்ப்பரேஷன் தீர்மானித்திருக்கிறது.

---

### தமிழ்நாடு காங்கிரஸ் மகாநாடு

தமிழ்நாடு மாகாணக் காங்கிரஸ் மகாநாடு செங்கற்பட்டு தாலூக்காவில், ஜனவரி கடைசி வாரத்தில் நடைபெறும்.

---

### ஸர் ராமசாமி முதலியார் சென்னை விஜயம்

இந்திய சர்க்கார் வியர்பார மெம்பர் ஸர் ஏ. ராமசாமி முதலியார் டிசம்பர் 10உ சென்னைக்கு விஜயஞ்செய்கிறார். பின் அங்கிருந்து செங்கற்பட்டுக்கும் மைசூருக்கும் சென்றுவிட்டு 20-உ கல்கத்தா செல்வார்.

---

### ராஜபாளையம் முனிசிபாலிடி?

ராஜபாளையம் பஞ்சாயத்தை ஒரு முனிசிபாலிடியாக்கலாமென்ற கவர்ன்மெண்டின் உத்தேசத்துக்கு ஆட்சேபமெதுவுமில்லையென்று டி. போர்டார் தெரிவித்திருக்கின்றனர்.

---

### ஸ்ரீ முத்துராமலிங்கத் தேவர் வழக்கு

ஸ்ரீ முத்துராமலிங்கத் தேவர் மீது மதுரை அடிஷனல் ஜில்லாக் கோர்ட்டில் தாக்கல் செய்யப்பட்டிருக்கும் ஜாமீன் வழக்கில், குற்றப்பத்திரிகையில் ருசுப்பிக்கப்படாத பல குற்றச்சாட்டுகள் சேர்க்கப்பட்டிருக்கின்றனவென்று ஆட்சேபித்து எதிரி ஹைக்கோர்ட்டில் கொடுத்த ரிவிஷன் மனு ஏற்றுக்கொள்ளப்பட்டது. வழக்கை வேறு கோர்ட்டுக்கு மாற்ற வேண்டுமென்ற மனு நிராகரிக்கப்பட்டது. மேற்கண்ட உத்தரவுகளை முன்னிட்டு அடிஷனல் ஜில்லா மாஜிஸ்திரேட் கோர்ட்டில் நடைபெற்று வந்த கேசு டிசம்பர் 4-ந் தேதிக்கு ஒத்திவைக்கப்பட்டது.

---

### திருவிதாங்கூரில் அடக்குமுறை
#### 4வது சர்வாதிகாரி கைது

திருவிதாங்கூர் சமஸ்தானக் காங்கிரஸின் நான்காவது சர்வாதிகாரி மிஸ் ரோஸ் செறியன் நவம்பர் 24உ திருவனந்தபுரத்தில் கைது செய்யப்பட்டார். ராஜத்துவேஷமான துண்டுப் பிரசுரங்களை வினியோகித்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்டிருக்கிறது. ஸ்திரீ போலீஸார் இவரைக் கைது செய்தனர். அவர் பெட்டியிலிருந்து ஆட்சேபகரமானவையென்று சில புத்தகங்களையும் கைப்பற்றினர்கள்.



## தபால் கார்டில் 177 வரிகள்

பம்பாயைச் சேர்ந்த நிர்மாணிகர் ஸ்ரீ சாம்ஸன் ஏ. எலிஜா என்பவர், தமது சாதாரணக் கண்பார்வையில், சாதாரணப் பேனவைக் கொண்டு ஒரு தபால் கார்டின் ஒரு பக்கத்தில் மொத்தம் 20 ஆயிரம் எழுத்துக்கள் (4000 வார்த்தைகள்) கொண்ட வைஸ்ராயின் சமீப கால அறிக்கை முழுமையும் எழுதி கார்டின் ஓரத்தில் வைஸ்ராய் படம் ஒட்டவும் இடம் விட்டிருக்கிறாராம். இதற்கு முன் பல தடவைகளிலும் இவர் இவ்வாறு எழுதியதுண்டு. இவருக்கு வயது 41.

---

### மதுக்கடைகள் திறக்கப்படமாட்டா

காங்கிரஸ் மந்திரிகள் ராஜினமாச் செய்துவிட்டதால், மூடப்பட்ட மதுபானக் கடைகள் மீண்டும் திறக்கப்படுமென்று எண்ணுவது முட்டாள்தனமான கருத்தாகுமென்று சேலம் ஜில்லா கலெக்டர் மிஸ்டர் டிக்ஸன் மதுவிலக்குக் கமிட்டிகள் கூட்டத்தில் குறிப்பிட்டார். கடைகளைத் திறக்கும்படி பலர் கையெழுத்திட்ட மனு சர்க்காருக்கு அனுப்பப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

---

### காங்கிரஸ் தலைவர் கைது

அலகபாத் நகரக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் மௌலான ஷாகித் பஹிரை 28உ போலீஸார் கைது செய்திருக்கின்றனர்.

### யம். யன். ராய்க்குத்தடை.

ஒரு வருஷ காலத்திற்கு பஞ்சாப்பிற்குள் நுழையக்கூடாதென ஸ்ரீ யம். என். ராய்க்குத் தடையுத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது.

---

### டெலிபோனும் யுத்தமும்

யுத்தம் காரணமாக செப்டம்பர் மாதத்தில் இந்தியா முழுவதிலும் 74,000 தடவை டிரங்கு டெலிபோன் உபயோகிக்கப்பட்டது. இது காரணமாக ஆகஸ்டு மாதத்தை விட செப்டம்பரில் 2 லட்சம் ரூபாய் அதிக வருமானம் கிடைத்திருக்கிறது. இம்மாத மொத்த வருமானம் 6 லட்ச ரூபாய்.

---

### இந்திய சர்க்கார் வரவு செலவு

ஏப்ரல் மாதத்திலிருந்து செப்டம்பர் மாதம் முடியவுள்ள 6 மாத காலத்தில் இந்திய சர்க்காரின் வரவு செலவில் 84 லட்சம் லாபம் கிடைத்திருக்கிறது. தபால் தந்தி இலாகாவில் மட்டும், 6 லட்சம் லாபம் கிடைத்திருக்கிறது. முந்தின வருஷம் 17 லட்சம் குறைவு ஏற்பட்டது.

---

### பார்லிமெண்டின் ரகசியக்கூட்டம்

அடுத்த சில வாரங்களுக்குள் பார்லிமெண்டின் ரகசியக் கூட்டம் ஒன்று நடைபெறுமென்று தெரிகிறது.

---

### திருவிதாங்கூர் மாதர் மகாநாடு

டிசம்பரில் கொல்லத்தில் நடைபெறப் போகும் அகில திருவிதாங்கூர் மாதர் மகாநாட்டுக்கு, திருவிதாங்கூர் ராஜகுமாரி கார்த்திகைத் திருநாள் தலைமைவகிக்க இசைந்துள்ளார். திவான் ஸர் ஸி. பி. ராமசாமி ஐயர் மகாநாட்டைத் திறந்து வைப்பார்.

---

### பட்டங்கள் இல்லை

யுத்தத்தை முன்னிட்டு பிரிட்டனிலும் இந்தியாவிலும் புது வருஷப் பட்டங்கள் அளிக்கப்படமாட்டா என்று தெரிகிறது.

---

நவம்பர் 27உ நடைபெற்ற கல்கத்தா கார்ப்பரேஷன் கூட்டத்தில், விமானப் படைகள் பாதுகாப்பு சம்பந்தமாக வங்க சர்க்கார் போட்டிருந்த திட்டம் நிராகரிக்கப்பட்டது. ஸ்ரீ சுபாஷ் சந்திரபோஸ் உள்பட 29 பேர் இத்திட்டத்துக்கு எதிராகவும் 16 பேர் சாதகமாகவும் ஓட்டுக் கொடுத்தனர்.

---

நவம்பர் 27உ பக்கிங்ஹாம் அரண்மனையில் ஸர் மகமத் ஸாபருல்லாகானுக்கு மன்னர்பிரான் பேட்டி யளித்தார்.

## கல்லுக்கட்டி ஊருணியில் விபத்து

(நமது நிருபர்)

நவம்பர் 27உ திங்கட்கிழமை பகல் காரைக்குடி திருவன் ஆசாரி குமாரன் சுமார் 30 வயதுள்ள அண்ணமலை ஆசாரி என்பவர் கல்லுக்கட்டி ஊருணியில் விழுந்து இறந்துபோனர். அவர் ஏழு எட்டு வருடங்களுக்கு முன் குடும்பத்தை விட்டு சுவாமியாராகப் போய்விட்டாராம். மேற்படியார் கொப்புடையம்மன் கோவிலுக்கருகிலுள்ள மகிழம்பூ மரத்திற்கடியில் கஞ்சாகுடித்துக்கொண்டிருந்ததாயும்பிறகு தண்ணீரில் இறங்கிக் குளித்தபோது ஆழத்தில் சென்று விட்டதால் சமாளிக்க முடியாமல் இறந்துவிட்டதாகவும் சொல்லப்படுகிறது. போலீசார் பிரேதத்தை வைத்தியப் பரிசோதனைக்கு அனுப்பியிருக்கின்றனர்.

---

### ரெட்டை அரு. உயில் வழக்கு

இவ்வழக்கின் விசாரணை தேவகோட்டை சப் கோர்ட்டில் நவம்பர் 27உ நடைபெற்றது. தேவகோட்டையில் சப் ரிஜிஸ்திரராயிருந்த திரு. ஏ. முத்துவேல் பிள்ளை முதலாவது சாக்ஷியாக விசாரணை செய்யப்பட்டார். 8—1—38ல் மனுக் கொடுத்துத் தம்மைக் கூப்பிட்டதில், மனு சரியாக எழுதப்படவில்லையென்று மனுவை நிராகரித்ததாயும், 9—1—38ல் சரியாக எழுதப்பட்டிருந்ததாயும் ரெட்டை அரு. அருணசலம் செட்டியார் உயிலின் 2-ம் பக்கத்தில் கையெழுத்திட்டதாயும், தாம் போன பொழுது வியாதியாய் படுத்திருந்ததாயும், 9—1—38ல் ரெஜிஸ்டர் செய்ததாயும் அவர் சாட்சியம் கூறினர்.

---

### மேஜர் தூக்கிச் செல்லப்பட்டார்.

மேஜர் டக்கல் ஐ. எம். எஸ். நவம்பர் 24உ மாலை எல்லைப்புறக் கொள்ளைக்காரர்களால் தூக்கிச் செல்லப்பட்டதாகப் பெஷாவர் செய்தி கூறுகிறது. அவரது டிரைவர் கொல்லப்பட்டார்.

---

### "தயாராக இருங்கள்"
#### மாகாணக் கமிட்டிகளுக்கு உத்தரவு

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிப் பொதுக் காரியதரிசி ஸ்ரீ கிருபளானி காரியக்கமிட்டி நிறைவேற்றியுள்ள தீர்மானத்தின் நகலை எல்லா மாகாணக் கமிட்டிகளுக்கும் அனுப்பி அத்தோடு ஒரு சுற்றறிக்கையும் அனுப்பியிருக்கின்றார். அதில் ஷை தீர்மானத்தில் கதர் சம்பந்தமாகக் குறிப்பிட்டிருக்கும் பாகத்தை வற்புறுத்தியிருப்பதுடன், காங்கிரஸ்காரர்கள் எப்போதும் தயாராயிருக்கவேண்டுமென்றும், அவசரப்பட்டுச் சொல்லிலோ செயலிலோ ஒன்றும் செய்யக் கூடாதென்றும், காங்கிரஸ் கமிட்டிகள் இத்தீர்மானப்படி மேற்கொண்டு செய்யும் வேலைகளை அவ்வப்போது அறிவிக்க வேண்டுமென்றும் தெரிவித்திருக்கின்றார்.

---

### அபேத வாதிகள் கைது

திருவண்ணமலையில் போலீஸார் 4 அபேதவாதிகளைக் கைது செய்திருக்கின்றனர்.

---

### இந்திய விடுதலையால் ஹிட்லர் கொள்கைக்கு வீழ்ச்சி

"இங்கிலாந்து ஹிட்லர் முறையை எதிர்த்துப் போராடிக்கொண்டிருக்கிறது. இந்தியாவுக்கு விடுதலை அளித்தால், ஹிட்லர் கொள்கை வீழ்ந்துவிடும்" என்று ஸ்ரீமான் ராஜகோபாலாச்சாரியார் புதுடில்லி ஹிந்து காலேஜ் மாணவர்கள் கூட்டத்தில் பேசும்போது குறிப்பிட்டார்.

---

### ஹாலந்து சித்திரங்கள்

ஹாலந்தின் அரிய சிற்ப வேலைகளும் சித்திரங்களும் யுத்தத்தில் சேதமடையாமல் பாதுகாக்கும்பொருட்டு அவை மணல் குன்றுகளிடையே மறைத்து வைக்கப்படுமாம்.

---

குளிர்காலத்தை முன்னிட்டு இத்தாலிய ராணுவத்தைச் சேர்ந்த 3,00,000 துருப்புகளுக்கு டிசம்பர் முதல் தேதி முதல் விசேஷ ரஜா அளிக்கப்பட்டிருப்பதாக ரோம் செய்தி கூறுகிறது.

## அரசியல் நிர்ணய சபை

### வகுப்புப் பிரச்னை தீர வழி

'ஹரிஜன்' பத்திரிகையில் மகாத்மா காந்தி வரைந்துள்ள கட்டுரையின் சில பகுதிகள் வருமாறு:—

முஸ்லிம்களுக்குத் தனி வாக்குரிமை மூலமும், தேவைப்பட்டால் உண்மையான ஒவ்வொரு மைனரிட்டிக்கும் அதன் ஜனத்தொகைக் கேற்றபடி ஸ்தானங்கள் ஒதுக்குவதன் மூலமும் வகுப்புப் பிரச்னையை எளிதாகத் தீர்த்துவிடலாம். ஜனங்களின் உண்மையான கருத்தை அரசியல் நிர்ணய சபையைத் தவிர வேறொன்றும் வெளிப்படுத்த முடியாது. பெருவாரியான முறையில் நீண்டகாலமாகக் காங்கிரஸ் தான் ஜனங்களின் பிரதிநிதித்வ ஸ்தாபனமாக விளங்குகிறதென்றாலும், அதை ஆட்சேபிக்க இதர அரசியல் ஸ்தாபனங்கட்கு உரிமையிருக்கிறது. நம் நாட்டிற்கு ஏற்ற ஒரு அரசியலை, அரசியல் நிர்ணய சபை மூலம் தான் பெறமுடியும். இது எல்லா வகையிலும் பூரணமானதாக இராமற் போனலும் உண்மையானதாக இருக்கும். சுயவாட்சி உண்மையானதாக இருக்கவேண்டுமானல் அது ஜனங்களின் உள்ளக் கருத்தைப் பிரதிபலிக்க வேண்டும் தவறுகளிழைத்தாலும், ஜனங்கள் தாங்களாகவே ஏற்படுத்திக் கொள்ளும் அரசியல் தான் பிறரால் சமத்தப்படும் ஒரு அரசியலைவிட—அது சரியான முறையிலிருந்தாலும்— மேம்பட்டதாகும். வான்கோழி பிறரிடமிருந்து தோகை கடன்வாங்கி மயிலாக ஆடமுடியுமா?

நாமாக அரசியலை நிர்ணயிப்பதில் எத்தனையோ கஷ்டங்கள் இருக்கத்தான் செய்கின்றன. ஆனல், இவற்றை யெல்லாம் சமாளித்துத்தானக வேண்டும். பிரிட்டனிலும்இந்தியாவிலுமுள்ள சிறந்தஅறிவாளிகளைக் கொண்டு இந்தியமக்களின்உள்ளக்கருத்தை உண்மையாகப் பிரதிபலிக்கக்கூடிய ஒரு சபையை நாம் கூட்டலாம். இதன் வெற்றி பிரிட்டிஷார் தமது அதிகாரத்தை விட்டுக்கொடுக்க விருப்பம் காட்டுவதையே பொறுத்திருக்கிறது. ஒரு பெருத்த கொந்தளிப்பு ஏற்படாமல் பாதுகாப்பதற்கும் இதுவே வழி.

சங்கடத்தினின்றும் விடுபட ஒரேவழி அரசியல் நிர்ணய சபைதான். வேறு எம் முறையும் ஜனநாயகத்துக்கு ஏற்றதாக இராது. இதற்குப் பெருந்தடை பிரிட்டிஷ் கவர்ன்மெண்டுதான். அவர்கள் யுத்தத்துக்குப் பிறகு ஒரு வட்டமேஜை மகாநாடு கூட்ட உத்தேசிப்பதுபோல, ஒரு அரசியல் நிர்ணய சபையைக் கூட்டமுடியும். இது மைனரிட்டிகளுக்குத் திருப்தியளிக்கும் முறையிலிருப்பதற்காக, ஒரு ஒப்பந்தத்தின் மூலம் முன்னதாகவே விளக்கிவிடலாம். ஆகவே, பிரிட்டிஷ் சர்க்கார், அதிகாரத்தை விட்டுக்கொடுத்து, தங்கள் நாட்டு சரித்திரத்தில் ஒரு புதிய சகாப்தத்தை ஏற்படுத்த விரும்புகிறார்களா என்பதே கேள்வி.

---

### தமிழ்நாடு மாதர் மகாநாடு

முதலாவது தமிழ்நாடு மாதர் மகாநாடு கோயம்புத்தூர் நகரசபை மண்டபத்தில், நவம்பர் 24உ டாக்டர் ஸ்ரீமதி முத்துலட்சுமி ரெட்டி தலைமையில் நடைபெற்றது. தலைவர் தமது உரையில், பிராமணர், பிற்போக்காளர், தீண்டாதார் என்று பிரிக்காதபடி எல்லோரும் இந்துக்கள் என்றழைக்கப்பட வேண்டுமென்று குறிப்பிட்டார். மாகாணம் முழுமையும் மதுவிலக்கையும் விபசாரிகள் தடைச் சட்டத்தையும் அமுலுக்குக் கொண்டு வரும்படியும், பாக்டரி இன்ஸ்பெக்டர்களாகப் பெண்களை நியமிக்கும்படியும் கேட்டுக்கொள்வதாகவும் தீர்மானங்கள் நிறைவேறின.

---

கள்ளிக்கோட்டையிலிருந்து வெளியாகும் 'மாத்ருபூமி' என்ற மலையாள தினசரி, வாரப் பத்திரிகை திருவிதாங்கூருக்குள் வரக்கூடாதெனத் தடுக்கப்பட்டிருக்கிறது.

---

ஜெர்மன் ஆதிக்கத்திலுள்ள பொஹீமியாவிலும், மொரோவியாவிலும் 400 ரோமன் கத்தோலிக்க குருமார்கள் கைது செய்யப்பட்டிருக்கின்றனராம்.

## தந்திச் செய்தி

### ரெங்கூன் மார்க்கெட்

ரெங்கூன், நவ. 29உ

| | |
|---|---|
| நலேன் நயில்செல், படகு செல் | 109/110 |
| மீடான் | 109/110 |
| சுகந்தி வெள்ளை அரிசி | 305/315 |
| முழுப் புழுங்கல் | 300/315 |
| மில்சார் | 295/300 |
| லொவ்ன் லெயின் | 272/8-0/290 |

---

### லண்டன் ரப்பர்

லண்டன், நவ. 27உ

ரப்பர் ராத்தல் ஒன்றுக்கு பதினென்றணையே மூன்று வீசம் பென்ஸ்.

---

### சென்னை மார்க்கெட்

சென்னை, நவ. 28உ

| | | | |
|---|---|---|---|
| சவரன் (மொத்த விலை) | 26 | 11 | 6 |
| சவரன் (சில்லரையில்) | 26 | 12 | 0 |
| மூசை தோலா 1க்கு | 41 | 9 | 6 |
| வெள்ளி செடி 100 தோலா | 61 | 8 | C |
| வெள்ளி (சில்லரையில்) ரூபாய் எடை | 0 | 10 | 0 |

---

### மரகத விநாயகர் வாசகசாலை அரண்மனை சிறுவயல்

21-11-39 மாலை ஐந்து மணிக்கு மரகத விநாயகர் வாசகசாலையின் 2-வது மாதக் கூட்டம் திரு. சுப. சுப்பிரமணியஞ் செட்டியார் அவர்கள் தலைமையில் கூடி திருவாளர்கள் பண்டிட் சுவாமி ராக நாட்டரசன் கோட்டை கரு. நா. நாராயணஞ் செட்டியார், உ. ராம. இராமனுதஞ் செட்டியார் முதலியோர் சொற்பொழிவாற்றினர்.

---

### பாசியன்

ஜவஹர்லால் புட்பால் ஷீல்டு நிபாவளியன்று விளையாட்டுகள் நடைபெற்று பரிசு வழங்கப்பட்டது.

---

### "தமிழ்நாட்டுத் தவமணிகள்"

20-11-39 இரவு 9-15 மணி முதல் 9-30 மணி வரை இலங்கை வான வசனியில் தேவகோட்டை ஸ்ரீ வி. இராமனுதன் செட்டியாரவர்கள் "தமிழ்நாட்டுத் தவமணிகள்" என்னும் பொருள்பற்றி ஒரு உரை நிகழ்த்தினர்.

---

### ஆவினிப்பட்டி

ஆவினிப்பட்டி நகரவைசிய அன்பர்களால் விவேகானந்த கல்விக்கழகத்தில் 23-11-39 வியாழக்கிழமை மாலை 4 மணி அளவில் நம் தொகுதி ஜில்லா போர்டு அங்கத்தினராகிய பூலாங்குறிச்சி ஸ்ரீ வ. சொ. ராம. வள்ளியப்பா எம். எல். ஏ. அவர்களுக்கு, கொழும்பு, வீரகேசரி அதிபர் திரு. பெ. பெரி. சுப்பிரமணியஞ் செட்டியார் அவர்கள் தலைமையில் ஓர் பாராட்டுக் கூட்டம் கூட்டப்பெற்றது. தலைவரவர்கள் ஸ்ரீ வள்ளியப்பா அவர்களுக்கு வெற்றி கிடைத்த விதத்தையும் அவருடைய நிர்வாகத் திறமைகளைப்பற்றியும் எடுத்துரைக்க ஸ்ரீ வள்ளியப்பா அவர்களுக்கு ஸ்ரீ அ. பழனியப்ப செட்டியார் அவர்களால் ஒரு உபசாரப் பத்திரம் வாசித்து வழங்கப்பட்டது. பாராட்டுக்குப் பதிலளிக்கும்போது ஸ்ரீ வள்ளியப்பா அவர்கள் தற்காலத்தின் ஜில்லா போர்டின் நிர்வாகம் காங்கிரஸ் மந்திரி சபைகளின் ராஜினமா முதலிய விஷயங்களைப்பற்றியும் தன்னுல் கூடுமான வரையில் எல்லா ஊர் வாசிகளுக்கும் தகுந்த சௌகரியம்செய்து கொடுப்பதாயும் பொதுவாக ஒவ்வொருவரும் காங்கிரஸ் மகாசபையின் கட்டளையை மீறாது இருக்கவேண்டு மென்றும் தேசப் பணியே சிறந்த பணியென்றும் குறிப்பிட்டு சுமார் 1½ மணி நேரம் சொற்பொழிவாற்றினர்கள்.

---

### சாதி வித்யாசம் இல்லை

இனி எல்லா சாதியினரும், சமூகத்தினரும் ராணுவத்தில் சேர்த்துக் கொள்ளப்படுவரென கபூர்தாலா பிரதம மந்திரி அறிவித்திருக்கிறார்.

## பிரிட்டனின் யுத்தச் செலவு

ஸர் ஜான் ஸைமன் செய்த ரேடியோப் பிரசங்கத்தில், இப்பொழுது யுத்தத்திற்காகப் பிரிட்டன் தினமும் குறைந்தது 60 லட்சம் பவுன் செலவிட்டு வருவதாகத் தெரிவித்தார். 1918ல் ஒரு விமானத்துக்குக் கொடுத்த விலையைப்போல இப்பொழுது மூன்றிலிருந்து ஏழு பங்குவரை ஒரு நவீன விமானத்துக்குக் கொடுக்கவேண்டியிருக்கிறதாம்.

நவம்பர் 14ந் தேதியோடு முடிவான வாரத்தில்மட்டும் எல்லாவிதமான சரக்குகளுக்குமாக 86,15,000 பவுனுக்குப் புதிய ஆர்டர் கொடுத்திருப்பதாகப் பிரிட்டிஷ் சப்ளை மந்திரி சபை அறிவித்திருக்கிறது.

### உயிர்ச்சேதம்

யுத்தத்தால் இதுவரை பிரிட்டிஷ் கடற்படையினரில் 1526 பேர் கொல்லப்பட்டனரென்று பிரிட்டிஷ் அறிக்கை கூறுகிறது. வியாபாரக் கப்பல்களைச் சேர்ந்தவர்களில் 250 பேர் மாண்டனர். பிரிட்டிஷ் ஆகாயப்படையில் 370 பேர் காணமலோ இறந்தோ போய்விட்டனர். இதில் மூன்றில் ஒரு பாகத்திற்கும் குறைவான தொகையினர் விரோதிகளது நடவடிக்கைகளால் இறந்தனர். பிரான்ஸிலுள்ள ராணுவம் ஒருவர்தான் இறந்ததாக அறிவித்திருக்கிறது. உயிர்ச்சேத ஜாப்தா எதுவும் அங்கு பிரசுரிக்கப்படவில்லை. பிரிட்டிஷாரைவிட பிரஞ்சுக்காரருக்கு குறைவாகவே உயிர்ச்சேத மேற்பட்டதாம்.

### சிங்கப்பூர் செட்டியார்கள் வர்த்தக சங்கம்

இச்சங்கத்தின் நிர்வாக சபைக் கூட்டமொன்று சென்ற ஐப்பசி-மீ 23-ந் தேதி மாலை சங்கக் கட்டிடத்தில் தலைவர் திரு லெ. அ. அ. அண. நாகப்ப செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

### சைலா

ஹனுமான் உடற் பயிற்சி சாலையில் தீபாவளி யன்று மாலை சிவில் ஸர்ஜன் ஜெயின் உல் அலாவுதீன் தலைமையில் போட்டி விளையாட்டுகள் நடைபெற்று, பரிசுகள் வழங்கப்பட்டன.

### கொழும்பு

நவம்பர் 19உ மாலை கொழும்பு செட்டியார் தெரு 19-ம் நிர் கடையில், ஜவஹர்லால் நேருவின் ஐம்பதாவது ஆண்டு விழாவை முன்னிட்டு அவரின் திருவுருவப்படத் திறப்புவிழா ஸ்ரீ சித. வீரப்ப செட்டியார் தலைமையில் நடைபெற்றது.

### சிவன்கோவில் முனிஸிபல் ஸ்கூல் காரைக்குடி

ஷை ஸ்கூலில் 1—12—39 வெள்ளிக்கிழமை மாலை 4-30 மணிக்கு ஷை ஸ்கூல் மாணவர்களுக்கு ஹிந்துஸ்தான் சாரணப் பயிற்சி அளிப்பது நிமித்தம் 'சிவா-கப்-பாக்' என்ற சாரணத் தொகுதி ஆரம்பிக்கப்படும். ஷை விழாவிற்கு முனிசிபல் கமிஷனர் ஸ்ரீ டி. புருஷோத்தம் அவர்கள் தலைமைவகிப்பதாயும், ஸ்ரீ ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் கொடி ஏற்றிவைப்பதாகவும் இசைந்துள்ளார்கள்.

### கைராட்டினத்தில்தான் கதிமோட்சம்

"நான் தலைமை வகித்து நடத்த வேண்டுமானல், நீங்கள் சர்க்கா விஷயத்தில் விசேஷ சிரத்தை காட்டவேண்டும். இருபது வருஷ அனுபவத்தில் நான் கண்டுகொண்ட உண்மையை உங்களுக்குச் சொல்கிறேன். கைராட்டினத்தில் தான் நம் நாட்டுக்குக் கதிமோட்சம் பிறக்கும். இந்த நம்பிக்கை முன்னைவிட இப்போது எனக்கு அதிகமாக ஏற்பட்டிருக்கிறது. காங்கிரஸ்காரர்கள் சர்க்கா விஷயத்தில் அதிக சிரத்தை காட்டவில்லை யென்பதற்காகவே நான் முன்னர் காங்கிரஸ் அங்கத்தினர் பதவியையும் ராஜினமாச் செய்துவிட்டேன்."

—மகாத்மா காந்தி.

## காரைக்குடியில் ஹிந்திப் பிரசாரம்

(நமது நிருபர்)

இராமகிருஷ்ண விவேகாநந்தர் சங்கத்தில் 28-11-39 செவ்வாய்க்கிழமை மாலை 6 மணிக்கு இராமனதபுரம் ஜில்லா போர்டுத் தலைவர் ஸ்ரீ குமாரசாமி ராஜா தலைமையில் பொதுக் கூட்டமொன்று நடந்தது. தலைவர் முகவுரைக்குப் பின் தக்ஷண பாரத ஹிந்திப் பிரசார சபையின் காரியதரிசியாகிய ஸ்ரீ சத்யநாராயண ஸ்ரீ சு. ராம. சு. சுப்பையாவால் நன்கொடையாக அளிக்கப்பட்ட இராமகிருஷ்ணரும் விவேகாநந்தரும் சேர்ந்திருக்கும் படத்தைத் திறந்து வைத்தார். அதன் பின் "ஹிந்தியும் நாமும்" என்பதைப் பற்றி அரிய சொற்பொழிவாற்றினர். தமது பேச்சில் இந்தியாவில் வாழும் மக்கள் அனைவரும் ஒரு சமுதாயமாக ஆகவேண்டுவதன் அவசியத்தையும், ஹிந்தி கற்கவேண்டியதன் முக்கிய தத்வத்தையும் குறித்து மிக விளக்கமாகப் பேசினர். ஸ்ரீ சத்யநாராயண முற்பகுதியை ஹிந்தியிலும் பிற்பகுதியைத் தெலுங்கிலும் பேசினர். ஹிந்தி உபாத்தியாயர் ஸ்ரீ தா. வெ. ராமசாமி ராஜாவும் ஸ்ரீ குமாரசாமி ராஜாவும் முறையே மொழிபெயர்த்தனர். தலைவர் முடிவுரைக்குப் பின் ஸ்ரீ ராம. சிதம்பரம் நன்றி கூறினர். குரூப் போட்டோ ஒன்று எடுக்கப்பட்டது.

### ராமனதபுரம் எஸ்டேட் மானேஜர் நியமனம்

ஜார்ஜ் டவுன், இரண்டாவது மாகாண மாஜிஸ்திரேட் ஸ்ரீ யல். ஆர். வெங்கட்ராம ஐயர் ராமனதபுரம் எஸ்டேட் மானேஜராக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

## ஸோவியத்-பின்லந்து தகராறு

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

3 ஜெர்மன் விமானிகள் சென்ற ஞாயிற்றுக்கிழமை காலை ஜெர்மன் எல்லைப் புறத்தைக் கடந்து சுவித்ஸர்லாந்திற்குள் சரண் புகுந்தனர்.

**பெல்ஜியத்தில் முஸ்தீபு**

ராணுவத்தைச் சேர்ந்தவர்களின் ரஜா ரத்து செய்யப்பட்டுவிட்டது. ஜெர்மன்—பெல்ஜிய எல்லைப்புறத்தில் துருப்பு நடமாட்டங்கள் நடக்கின்றன. 20 மைல் தூரம் அணிவகுத்து நின்ற ஜெர்மன் துருப்புகள் கலைக்கப்பட்டன.

**காந்த சுரங்க வெடி**

ஜெர்மன் மாக்னடிக் (காந்த) சுரங்க வெடிகளை எதிர்த்துச் சமாளிப்பதற்கான நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டதாக பிரிட்டிஷ் சர்க்கார் அறிவித்திருக்கின்றனர். வெடிகளை வார, 200 படகுகளிலும் மீன் பிடிக்கும் கப்பல்களிலும் வேலை செய்ய 2000 தொண்டர்கள் சேர்ந்துவிட்டனர்.

**சோவியத்—பின்லந்து தகராறு**

சோவியத்தும்-பின்லந்தும் தங்களிடையே தகராறிலுள்ள பிரச்னைகளைக் கூடிய சீக்கிரம் தீர்த்துக்கொள்ளுமாறு அவ்விரு நாடுகளுக்கும் ஜர்மனி அறிவித்திருக்கிறதாம்.

கரிலியா பிரதேசத்திற்கு மேலே பறந்த சோவியத் விமானங்கள்மீது பின்லந்துப் படையினர் பீரங்கிப் பிரயோகம் செய்ததால், பல விமானங்கள் வீழ்த்தப்பட்டன. இதைக் குறித்த ஸோவியத் கண்டனத்திற்கு, பின்லந்து எல்லையிலிருந்து ஒரு குண்டுகூடப் பிரயோகிக்கப்படவில்லை யென்றும், ஆனல் சோவியத் தரப்பிலிருந்தே ஏழு முறை பீரங்கிப் பிரயோகம் செய்யப்பட்டதாயும் பின்லந்து சர்க்கார் பதிலளித்திருக்கின்றனர்.

ஜர்மன் சரக்குகளைக் கைப்பற்றுவதற்குரிய உத்தரவில் இன்று மன்னர் பிரான் கையெழுத்திட்டுவிட்டார். நாளை உத்தரவு வெளியாகும். நடுநிலைமை நாடுகளின் நலன்கள் மிகுதியும் கவனிக்கப்படும்.

**28உ செவ்வாய்**

ஒரு சிறிய பிரதேசத்தைத் தவிர மேற்குப் போர்முனையில் மற்ற இடங்களிலெல்லாம் அமைதியே நிலவுகிறது எனப் பாரிஸ் செய்தி கூறுகிறது.

## நோட்டீஸ்

### சிவகெங்கை டி. மு. கோர்ட்டு

1938-ஞு S. C. No. 764.
1939-ஞு E. A. No. 276.

குமு. அருணசலம் செட்டியார் } வாதி

(1) வெள்ளைக்கண்ணு நாடான் Died } பிரதிவாதி

(2) பெரியணன் நாடான்
(3) தொத்தன் என்ற முத்தையா நாடான்
(4) ராமன் நாடான்
(5) குமராயி
} பிரதிவாதி வார்சுகள் — 2முதல் 5 பிரதிவாதிகள்

2 முதல் 5 வரை பிரதிவாதிகள் என்பவர்களுக்கு:—

இறந்துபோன 1-வது பிரதிவாதிக்கு உங்களை வார்சுகளாக 2 முதல் 5 வரை பிரதிவாதிகளாகச் சேர்த்துக்கொண்டு ஷை நிம்பர் டிக்கிரியை நிறைவேற்றிக்கொள்ள மனுக்கொடுத்து 12-12-39உ வாயிதா ஏற்பட்டிருக்கிறது. ஆட்சேபணையை ஷை வாயிதாவன்று பகல் 10 மணிக்கு ஷை கோர்ட்டு முன் ஆஜராகி தெரிவித்துக்கொள்ள வேணும். தவறினல் ஒருதலைப்பட்சமாய் தீர்மானிக்கப்படும்.

G. Nagaswami Iyer, Vakil.

சிவகெங்கை, 28-11-39.

### யுத்தத்துக்கு இந்தூர் மன்னர் உதவி

பிரான்ஸிலுள்ள தமது இரண்டு பங்களாக்களையும் யுத்த காரியங்களுக்காக உபயோகித்துக் கொள்ளுமாறு இந்தூர் மன்னர் பிரஞ்சு சர்க்காரிடம் ஒப்படைத்துவிட்டார். பிரிட்டிஷ் செஞ்சிலுவை நிதிக்கு 1000 பவுனும் உதவியிருக்கின்றார்.

### செவிட்டு, ஊமைப் பள்ளிக்கூடம்

காரைக்குடியில் நகரசபையார் நடத்திவரும் செவிட்டு, ஊமைப் பள்ளிக்கூடத்தைப் பார்வையிட்டுவிட்டு, ஜில்லாக் கல்வியதிகாரி தமது அறிக்கையில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:—

வாசித்தல், எழுதல், கணக்கு ஆகியவற்றில் குறிப்பிடத் தக்க அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது. எழுதின விஷயத்தைக் குழந்தைகளுக்கு தெரிந்துகொள்ள முடிகிறது. பேசவும் கொஞ்சம் திறமை பெற்றிருக்கிறார்கள். இயற்கை சாஸ்திரம், பூகோளம் முதலியவற்றையும் கற்பிக்க அவசிய மேற்படும். டிராயிங் வெற்றிகரமாகக் கற்பிக்கப்பட்டிருக்கிறது. பொதுவாகப் பள்ளிக்கூடம் திருப்தியளித்தது. இதை ஏற்படுத்தி நடத்தி வரும் நகரசபை பாராட்டத் தக்கது. பள்ளிக்கூடமிருக்கும் விஷயத்தைப்பற்றி நல்ல விளம்பரம் செய்தால், அதிகம் பிள்ளைகள் சேருவதாகும்.





## குடிகளுக்கு வரி கொடுக்கும் ராஜா!

### லீக்டன்ஸ்டீனில் அதிசயம்

### இதுவும் ஹிட்லர் வசப்படுமா?

உலகிலே எத்தனையோ மன்னர்கள் ஆள்கிறார்கள். குடியரசுகளும் இருக்கின்றன. பெரிய சாம்ராஜ்யங்களும், சிறு நாடுகளும் இருக்கின்றன. நாடு சிறிதாயிருப்பினும், பெரிதாயிருப்பினும், எல்லா நாடுகளிலும், குடிகள் கொடுக்கும் வரிப் பணத்தைக் கொண்டே அரசாங்கம் நடத்தப்படுவதைக் காண்கின்றோம். இது தான் வழக்கம். இதற்கு நேர்மாறாக, குடிகளுக்கு, குடிகளை ஆளும் அரசன் கப்பங் கட்டும் வழக்கம் உள்ள நாடு எங்கேனுமிருக்குமானல் அது ஒரு பெரிய அதிசயமல்லவா? இந்த அதிசயத்தை லீக்டன்ஸ்டீன் என்ற மிகக் குறுகிய நாட்டில் காணலாம்.

ஜெர்மனிக்குத் தெற்கே சுவிஸர்லாந்துக்கு வடகிழக்கே, இரு தேசங்களும் சந்திக்குமிடத்தில் இச்சிறு நாடு இருக்கின்றது. இதன் ஜனத்தொகை பதினோராயிரம் தான். சுதந்திரமும் செல்வ வளமும் செறிந்தது. வெண்டஸ் என்பது இந்நாட்டின் தலைநகரம். இதைக் குபேர பட்டணம் என்று சொல்லலாம். இதையும் ஏன் உண்டு ஏப்பம் விட்டு விடக்கூடாதென்று ஹிட்லர் யோசித்து வருவதாகச் சொல்லப்படுகிறது.

வெகு காலத்துக்கு முன்னர் இந்நாடு ஆஸ்திரியாவுக்கு அடங்கிய ஒரு சிறிய ஜமீனகத் தான் இருந்து வந்தது. பின்னர் தான் இது சுதந்திரம் பெற்று, ஒரு தனி நாடாயிற்று.

1926ல் இந்நாட்டில் ஒரு அதிசய சம்பவம் ஏற்பட்டது. அது ஒரு தலைகீழ் மாற்றத்தை ஏற்படுத்திற்று. லீக்டன்ஸ்டீன் நாட்டை ஆளும் கவுரவத்தை அந்நாட்டு மக்கள் அரசருக்கு அளித்திருப்பதற்கு, மன்னரே மக்களுக்குப் பணம் கொடுக்க வேண்டுமென்ற ஓர் கிளர்ச்சி பலத்தது. குடிகள் கட்சித் தலைவர்களெல்லோரும் சேர்ந்து, தங்கள் நாட்டைப் பரம்பரையாக ஆண்டுவரும் பாத்தியதைக்காக, மன்னர் வருடந்தோறும் மக்களுக்கு 24,000 பவுன் கொடுக்க வேண்டுமென்றும், இன்றேல், நாட்டை விட்டு மூட்டை முடிச்சுகளுடன் வெளியேறி விட வேண்டியது தான் என்றும் ஒரு 'இறுதிக் கடிதம்' அனுப்பினர்.

இவ்வாறு மக்கள் முடிவு செய்ததற்குக் காரணமில்லாமற் போகவில்லை. மன்னர் பெருஞ் செல்வவான். குடிகளது வரிப் பணம் அவருக்குத் தேவையில்லை. ஆட்சி நடத்துவதற்கு வேண்டிய செலவுகளை அவரே, தமது வருமானத்திலிருந்து நடத்திக்கொள்ள இயலும். ஐரோப்பாவின் பல பாகங்களிலும் அவருக்கு தொழிற்சாலைகளும், சுரங்கங்களும் காடுகளும், நிலபுலன்களும் இருக்கின்றன. எனவே, மக்கள் கோரிக்கைக்கு மன்னர் இணங்கினர். லிக்டன்ஸ்டீன் நாடு பால் பண்ணைக்குப் பேர் போனது. அங்குள்ள பசுக்கள் மிக அழகுவாய்ந்தவை. அங்கு தயாரிக்கப்படும் வெண்ணெய், உலகப் பிரசித்தி பெற்றது.

சென்ற மகா யுத்தத்தின் பயனக ஐரோப்பாவின் பொருள்நிலை ஆட்டங்கொடுத்த போது, வருமான வரிப்பளுவைத் தாங்க முடியாது, லேவாதேவிக்காரர்கள் பலர் வருமான வரியோ, வேறு எவ்வித வரியோ இல்லாத லீக்டன்ஸ்டீனுக்குச் சரண் புகுந்தனர். பல வியாபார ஸ்தாபனங்கள் ஏற்பட்டன. அரசாங்கம் இவர்களுக்கு வேண்டிய சாதனங்களைச் செய்து கொடுத்தது. கம்பெனிகள் ஸ்தாபிக்கவும், அவற்றை எளிதில் நிர்வகிக்கவும், சர்க்காரே பல வசதிகளை இயற்றினர். வரி விதிக்கும் சட்டங்களின் கொடுமையினின்றும் தப்புவதற்கு என்னென்ன மார்க்கங்கள் உண்டு என்பதை விளக்கி அந்நாட்டு முதல் மந்திரியே ஒரு புத்தகம் எழுதியிருக்கிறாராம்!

அந்நாட்டில் ஒருவரே ஒரு கூட்டுக் கம்பெனியை ஸ்தாபிக்கலாம். எந்த நாட்டு நாணயத்திலும் அதற்குப் பங்குகள் ஏற்படுத்திக்கொள்ளலாம். எந்த பாஷையிலும் ரெஜிஸ்டர் செய்துகொள்ளலாம். இவ்வளவு வசதிகளும், சாதகங்களும் கிடைத்தால் அயல் நாட்டு வர்த்தகர்கள் ஏன் பயன்படுத்திக்கொள்ளமாட்டார்கள்? இப்பொழுது அந்நாட்டில் ஏறக்குறைய 5000 கம்பெனிகள் இருக்கின்றன. இவற்றின் மொத்த மூலதனம் 160 கோடிப் பவுன்.

இவ்வாறு பல விதத்திலும் செழித்தோங்கிநிற்கும் லீக்டன்ஸ்டீனிலும் நாஜி இயக்கம் புகுந்துவிட்டது. சட்டசபையிலுள்ள மொத்தம் 17 ஸ்தானங்களில் 4 ஸ்தானங்களை நாஜிகள் கைப்பற்றிக் கொண்டனர். முழுவதும் நாஜி மயமாகிவிட்டால் ஆஸ்திரியாவைப் போன்று இச்சிறு சுதந்திர நாடும் ஹிட்லர் ஆதிக்கத்துக்குள் அகப்பட்டுவிடும் என்று பயப்படுகிறார்கள். ஆனல், முடிவு என்னவாகும்?

(நமது நிருபர்)

காரைக்குடி நகரசபையின் சாதாரணக் கூட்டமொன்று சென்ற சனிக்கிழமை மாலை 5 மணிக்கு சேர்மன் ஸ்ரீ ராய சொக்கலிங்கன் தலைமையில் நகரசபை மண்டபத்தில் கூடிற்று. தலைவருள்பட பத்து அங்கத்தினர்கள் விஜயஞ் செய்திருந்தனர்.

### தீபாவளி இனும்

முனிசிபல் ரெஸிடென்ஷியல் பள்ளிக்கூட ஹரிஜனப் பையன்களுக்கு திரு. மெ. செ. மெ. மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள் தீபாவளியை முன்னிட்டு 20 ஜோடி வேஷ்டிகள் இனாமாகக் கொடுத்தமைக்காக, நன்கொடையாளருக்கு சபை வந்தனம் செலுத்துவதாகத் தீர்மானிக்கப்பட்டது.

### இராப் பள்ளிக்கூடம்

ஹரிஜன் காலனியில், முதியவர்களுக்கு இராப்பள்ளிக் கூடம் திறப்பதைத் தற்பொழுது நிறுத்திவைக்கும்படி ஜில்லாக் கல்வியதிகாரி எழுதியுள்ளபடி செய்வதென முடிவு செய்யப்பட்டது. 4-வது வார்டு பள்ளிக் கூடத்திற்கு அதிகப்படியாக ஒரு உபாத்தியாயினி நியமிக்க அனுமதி யளிக்கப்பட்டது.

### ரயில்வே ரஸ்தா விளக்குகள்

யுத்த நெருக்கடியை முன்னிட்டு ரயில்வே ஸ்டேஷனுக்குச் செல்லும் ரஸ்தாவில் மின்சார விளக்குகள் போடுவதற்குச் சாத்தியமில்லை யென்று தெரிவித்த ரயில்வேக் கம்பெனி ஏஜண்டின் கடிதம் படிக்கப்பெற்று, சில விளக்குகள் போடுவதற்கு, யுத்தத்தைக் காரணமாகச் சொல்லித் தட்டிக்கழிப்பது பொருத்தமா யில்லை யென்றும், புனராலோசனை செய்து உடனே விளக்குகள் போடும்படி மறுபடியும் கேட்டுக் கொள்வதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

### பொருளாதார நிலை

கவுன்ஸிலின் பொருளாதார நிலைமையைக் குறிப்பிட்டு, சில சிக்கன முறைகளைக் கையாளும்படி யோசனை கூறியுள்ள கமிஷனரின் குறிப்பு படித்து அங்கீகரிக்கப்பட்டது. அதிகப் பள்ளிக்கூடங்கள் திறக்கும் விஷயம் தற்போது நிறுத்தப்படும். அடுத்த வருஷத்தில் புது வேலையெதுவும் எடுக்கப்படமாட்டாது. திங்கட்கிழமை சந்தைப்பேட்டையை அக்வயர் செய்வதும், முனிசிபல் பால் பண்ணை ஸ்கீமும், நிறுத்தப்பட்டன.

### தெரு விளக்குகள்

சென்ற செப்டம்பர் முதல் தெரு விளக்குகளுக்கு 40 வாட்ஸ் விளக்கு ஒன்றுக்கு மாதம் ஒன்றுக்கு ரூ 1-6-0 வீதமும், கூடுதல் பவருள்ள விளக்குகளுக்கு இந்த வீதாசாரப்படியும் கரண்டு சார்ஜ் குறைக்கப்பட்டிருக்கிறதென்றும், பராமரிப்புச் செலவைக் குறைக்கும் விஷயம் யுத்தம் முடிந்த பிறகு ஆலோசிக்கப்படுமென்றும், எலக்டிரிக் கார்ப்பொரேஷன் மானேஜிங் டயாக்டர் எழுதியுள்ள லட்டர் படிக்கப்பட்டு, முதலாவது விஷயத்தை ஒப்புக்கொள்வதென்றும் யுத்தத்தை உத்தேசித்துப் பராமரிப்புச் செலவை 6 அணுவாக ஒப்புக்கொள்ள வேண்டு



காரைக்குடி நகர சபை

## கவுன்ஸிலின் பொருளாதார நிலை

## சிக்கன முறைகளைக் கையாளக் கமிஷனர் சிபார்சு

மென்றும், இல்லாவிட்டால் அடுத்த ஏப்ரல் முதல் முனிசிபாலிடியே பராமரிப்பை ஏற்று நடத்துவதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

### சிவகெங்கை லே அவுட்

செக்காலையில் சிவகங்கை லே அவுட் சம்பந்தமான பேப்பர்களும் டவுன் பிளானிங் டைரக்டரின் கடிதமும் படிக்கப்பட்டன. விளையாடு மிடங்கள், பார்க், பள்ளிக்கூடம், முதலிய பொது இடங்களை இப்பொழுதே முனிசிபாலிடியாரிடம் கொடுத்துவிட வேண்டுமென்ற நிபந்தனையுடன் லட்டரை ஒப்புக்கொண்டு அனுமதிப்பதெனத் தீர்மானிக்கப்பட்டது.

### நீதி வாக்கியங்கள்

சுகாதார டயாக்டரால் தமிழில் தயாரிக்கப்பட்ட சுகாதார நீதிவாக்கியங்களில் 12 செட்டுகள் வாங்கி முனிசிபல் பள்ளிக்கூடங்களுக்கு வழங்குவ தென்று தீர்மானிக்கப்பட்டது.

### கஞ்சா, அபின் கடைகள்

முனிசிபல் எல்லைக்குள்பட்ட கஞ்சா, அபின் கடைகளின் எண்ணிக்கை, இருக்குமிடம் ஆகியவைகளில் அடுத்த வருஷத்துக்கு ஏதாவது மாறுதல்கள் செய்ய வேண்டுமா என்று கேட்டு வரலான ஜில்லா கலக்டரின் கடிதம் படிக்கப்பட்டு, இவ்விஷயமாய் நகரசபை இதுவரைக் கூறிய அபிப்பிராயங்களுக்கு எவ்விதப் பயனும் ஏற்படாமையால் தற்பொழுது எவ்வித அபிப்பிராயமும் கூற இந்தக் கவுன்ஸில் விரும்பவில்லை யென்று பதிலெழுத முடிவு செய்யப்பட்டது.

### மழைச் சேதம்

சமீபத்தில் பெய்த பெருமழை காரணமாக முனிசிபல் சொத்துக்களுக்கு ஏற்பட்ட சேதத்தையும், ரிப்பேர் செய்ய எடுத்துக் கொண்ட நடவடிக்கைகளையும் பற்றிய கமிஷனரின் ரிப்போர்ட் ஒப்புக்கொள்ளப்பட்டது. கோவிலூர் ரோட்டை விரைவாக ரிப்பேர் செய்யும்படி ஜில்லா போர்டைக் கேட்டுக் கொள்வதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

### சொத்து வரி விதிப்பு

சொத்தின் மதிப்பின் பேரில் அல்லாமல் வருமான மதிப்பின் பேரில் சொத்து வரி விதிப்பதை அனுமதிக்குமாறு கவர்ன்மெண்டைக் கேட்டுக் கொள்வதென்று 12—8—38ல் கவுன்சில் தீர்மானித்ததற்கு, சொத்துக்களின் பேரில் வரி விதிக்கும் விஷயத்தில் நிர்வாக அதிகாரியின் யுக்தத்தில் கவுன்சிலார் தலையிடக் கூடாதென்ற சர்க்கார் உத்தரவு ரிக்கார்டு செய்யப்பட்டது.

### மரப்படி

கட்டிடங்களுக்கு முன் போட்டிருக்கும் மரப்படிகளுக்கு ரூபாய் ஒன்று வீதம் வருடாந்தப் பீஸ் விதிக்கலாமென்ற சர்வேயரின் கோட்டுப்படி பீஸ் விதிக்க அனுமதிக்கப்பட்டது.

இன்னும் பல மாமூலான விஷயங்கள் கவனிக்கப்பட்டு இரவு 7-மணிக்கு சபை முடிந்தது.

### அடுத்த கூட்டம்

காரைக்குடி நகர சபையின் அடுத்த கூட்டம் நாளையதினம் வெள்ளிக்கிழமை (1-12-39) மாலை 4 மணிக்கு நகர சபை மண்டபத்தில் நடைபெறும்.











## மிருகங்களுக்கு ஞாபகச் சின்னங்கள்

சாதாரணமாக வீரர்களுக்கும், தேசத் தலைவர்கள், பொது நன்மைக்காக ஊழியம், உதவி புரிந்தவர்கள் முதலியோருக்கும் ஞாபகச்சின்னங்கள் அமைப்பது வழக்கம். ஆனால் செல்வமாக வளர்த்து வந்த பிராணிகளுக்கும், வீர மிருகங்கட்கும் ஞாபகச் சின்னங்கள் அமைத்திருப்பது விசேஷமல்லவா? பிரிட்டிஷ் தீவுகளில் இம்மாதிரி பல சின்னங்கள் இருக்கின்றன.

சுமார் 90 வருஷங்கட்கு முன் ஒருவர் தாம் வளர்த்து வந்த மீனுக்கு ஒரு கல்லறை கட்டியிருக்கின்றார். கிளவுஸ்ஷயரில் இந்த மீன் சமாதியிருக்கிறது.

ஸ்டாபோர்டுஷயரில், ஒரு பூந்தோட்டத்தில் பெர்ஷியன் பூனைக்கு ஒரு ஞாபகச்சின்னம் அமைக்கப்பட்டிருக்கின்றது. 17-வது நூற்றாண்டில் புகழுடன் பிரகாசித்த கப்பல் தலைவர் ஸர் ஜார்ஜ் ஆன்ஸன் செல்வமாக வளர்த்த பூனைக்கு அவரது ஞாபகார்த்தமாகக் கட்டப்பட்டிருக்கும் வெற்றி வளைவின் சமீபம் ஞாபகச் சின்னம் அமைக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பூனையின் சாம்பல் அடக்கம் செய்யப்பட்டு அதன் படமும் வரையப்பட்டிருக்கிறது. இப்பூனை அவருடன் நீண்டதூரம் பிரயாணம் செய்ததாம்.

செஷயரில் ஒரு நாயின் ஞாபகார்த்தமாக 25 அடி உயரத்தில் ஒரு கோபுரம் கட்டப்பட்டிருக்கிறது. இது ஒரு சமயம் தன்னந்தனியாக, மெர்ஸி நதியைக் கடந்து அக்கரை சேர்ந்ததாம்.

விஞ்சஸ்டருக்குச் சமீபம் கல்லால் முக்கோண வடிவத்தில் ஒரு குதிரைக்கு ஞாபகச் சின்னம் கட்டப்பட்டிருக்கிறது. இந்தக் குதிரையைப்பற்றிய கதை அதிசயிக்கத்தக்கது. 1733ல் ஸர் பாலட் என்பவர் தன் குதிரை மீதேறி வேட்டைக்குச் சென்றார். வழியில் குதிரை திடீரென 25 அடி ஆழமுள்ள ஒரு சுண்ணாம்புக் குழிக்குள் விழுந்துவிட்டது. ஆனால் நாய்க்கோ, சவாரி செய்தவருக்கோ காயமில்லை. இது நிகழ்ந்து ஒரு வருஷத்துக்குப் பின் அதே குதிரை ஒரு பந்தயத்தில் முதல் பரிசு பெற்றது. குதிரை இறந்ததும், அதற்காக இந்த ஞாபகச் சிலை நாட்டப்பட்டது.

மிருகங்களுக்கு ஏற்படுத்தப்பட்டுள்ள ஞாபகச் சின்னங்களிலெல்லாம் விசேஷமானது வடக்கு வேல்ஸில் ஒரு நாயின் ஞாபகார்த்தமாகக் கட்டப்பட்டிருப்பது தான். அந்த நாயின் பேரே ஒரு கிராமத்திற்கும் போராக இன்னும் விளங்குகிறது. ஜிலர்ட் எனும் பெயருடைய நாய், சுமார் 600 வருடங்கட்கு முன் அப்பக்கத்தில் வாழ்ந்து வந்த ஒரு லெவில்லியன் எனும் ராஜ குமாரனுடையதாகும். ஒரு நாள் அவன் வெளியிற் சென்று வீடு திரும்பியபோது அவனது நாய் அவனை நோக்கி ஓடி வருவதைக் கண்டான். வீட்டுக்குச் சென்று பார்த்தபோது, தரையெல்லாம் ரத்தக் கறைகள் படிந்திருந்தன. அவனது இளைய குமாரனைத் தொட்டிலில் காணோம். தன் நாயே கொன்றிருக்க வேண்டுமென்றெண்ணி, வாளை உருவி நாயைக்கொன்றுவிட்டான். நாய் மரண வேதனையில் போட்ட சப்தத்தைக் கேட்டு, சிறிது தூரத்தில் படுத்திருந்த குழந்தை சப்தமிட்டது. போய்ப் பார்க்க, அதன் சமீபம் ஒரு ஓநாய் கொல்லப்பட்டுக் கிடந்தது. உண்மை புலனாயிற்று. குழந்தையைக் கொல்லவந்த ஓநாயைக் கொன்றுவிட்டு, தன் எஜமானனை அழைக்கவே நாய் சென்றிருக்கவேண்டும். இந்த நன்றியறிவுள்ள நாயின் தீரத்தைப் பாராட்டி அதன் எஜமானன் அந்தக் கிராமத்துக்கு அதன் பெயரைக்கொடுத்து, அது புதைக்கப்பட்ட இடத்தில் ஒரு ஞாபகச் சின்னமும் ஏற்படுத்தினான்.

### சிவகெங்கை

18-11-39 சனிக்கிழமை மாலை 7 மணிக்கு சிவகெங்கை அரண்மனைவாசல் முன்பாக ஸ்ரீ மூக்கையா என்ற முருகப்பா அவர்கள் தலைமையில் ஓர் காங்கிரஸ்பொதுக்கூட்டம் சிவகெங்கை நகர காங்கிரஸ் கமிட்டி ஆதரவில் நடைபெற்றது. அவ்வமயம் ஸ்ரீமான்கள், கா. வெ. சேதுராமச்சந்திரன், மனோகரன் ஆகியவர்கள், தேசத் தியாகிகள் ஸ்ரீமான்கள் லஜபதிராய், வ. உ. சிதம்பரம் பிள்ளை ஆகிய மாபெருந் தலைவர்களின் வாழ்க்கைச் சரித்திரத்தைப் பற்றி விரிவாகப் பேசினார்கள்.

### காளையார் கோவில்

21-11-39 மாலை 5 மணிக்கு இவ்வூர் சர்க்கிளுக்கு காங்கிரஸின் சார்பில் ஜில்லா போர்டு மெம்பராக போட்டியன்னியில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஸ்ரீ சொ. வ. காசி முத்துப்பிள்ளை அவர்களைப் பாராட்டி ஒரு டீ விருந்தும் சப்ரிஜிஸ்தரார் ஸ்ரீ கிருஷ்ணத் தேவர் தலைமையில் ஒரு பாராட்டுக் கூட்டமும் நடத்தப் பெற்றன.

### இலட்சுமிபுரம்

ஸ்ரீ மீனாட்சி சங்கத்தின் மாதக் கூட்டம் கார்த்திகை மாதம் 7உ மாலை 4 மணிக்கு சொக்கலிங்க வித்தியாசாலையில் உள்ளூர் போஸ்ட் மாஸ்டர் ஸ்ரீமான் R. ஸ்ரீனிவாஸ ராவ் தலைமையில் நடைபெற்றது. மாணவ மாணவிகளின் பாட்டு பேச்சு, தேவாரம், நடிப்பு முதலியன நடைபெற்றன. ஆசிரியர் திரு. M. இராமனுதய்யரவர்கள் மாணவர்க்கோர் அறிவிப்பு" என்னும் பொருள் பற்றி ஓர் சொற்பெருக் காற்றினார்.







### சரஸ்வதி வாசகசாலை தேவகோட்டை

ஐப்பசி-மீ 27உ திங்கட்கிழமை மாலை 5-மணிக்கு வாசகசாலைக் கட்டிடத்தில் திரு. கா. சி. முத. முத்தப்பா செட்டியார் தலைமையில் இங்கர் பாகனி திரு. வயி. நாகரம், வே. இராமநாதன் செட்டியார் அவர்கள் "கண்ணகி நிறையும் தென்னவன் முறையும்" என்னும் பொருள்பற்றி ஓர் இனிய சொற்பொழிவு நிகழ்த்தினார்.

### இந்திய இளைஞர் சங்கம் தேவகோட்டை

இச்சங்கம் 24-11-39 ல் திருப்பத்தூர் ரோட்டில் இன்கம்டாக்ஸ் ஆபீசுக்கு மேல்புறம் உள்ள காம்பவுண்டிற்கு மாற்றம் பெற்றிருக்கிறது. அன்று நடந்த அங்கத்தினர்களின் பொதுக்கூட்டத்தில் இவ்வருஷ உத்தியோகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

## :: சினிமா ::

### 'பேண்'

நேஷனல் ஸ்டுடியோவின் முதல் படம் "பெண்" படப் பிடிப்பு ஆரம்பமாகிவிட்டது. மெஹ்பூப் இதை டயரக்ட் செய்கிறார். கூடிய விரைவில் அவர் இன்னும் இரு படங்களை ஆரம்பிப்பார் என்று தெரிகிறது. ஹைதர் அலி, கெமால் பாஷா இவர்களின் சரிதங்களை விளக்கும் படங்கள் இவை.

•

### காலஞ்சென்றார்

வாஹினி பிக்சர்ஸைச் சேர்ந்த வி. ஆர். கிருஷ்ணமூர்த்தி சமீபத்தில் காலஞ் சென்றார். அவர் 'வந்தேமாதர'த்தில் ராஜா பகதூராக நடித்தார். இந்தக் கம்பெனியில் ஆரம்பத்தில் ஒரு உதவி காமராக்காரராகச் சேர்ந்து இவர் தமது திறமையால் சிறந்த நடிகராக விளங்கினார்.

•

### சர்வாதிகாரி

சார்ளி சாப்ளின் நடிக்க விருக்கும் 'சர்வாதிகாரி' என்ற ஹிட்லர் படத்தில் அவருக்கு இரண்டு வேடங்கள். ஒன்று ஹிட்லர்; மற்றொன்று ஹிட்லரைப்போலத் தோற்றமளிக்கும் ஒரு ஜர்மன் தையற்காரன். ஹிட்லர் தமது பாதுகாப்புக்காக, தம்மைப்போல தோற்றமுள்ள மற்றொருவரை உபயோகிக்கும் வழக்கத்தை அடிப்படையாகக்கொண்டு இதில் ஹாஸ்யம் அமைக்கப்பட்டிருக்கிறது. சார்ளி, ஹிட்லரின் பேச்சுக்கள் பதிப்பிக்கப்பெற்ற ரிக்கார்டுகளைக் கேட்டு வருகிறார். ஆனால் அவர் ஹிட்லராகப் பேசப்போகும் வார்த்தைகளில் ஒன்றுகூட ஜர்மன் மொழியாக இராதாம்!

•

### ஸ்ரீ உதயசங்கர்

இந்தியாவில் பிரபல நாட்டியக்காரரான ஸ்ரீ உதயசங்கர் டிசம்பர் முதல் வாரத்தில் சென்னை வருகிறார். அங்கு மூன்று தினங்கள் அவரது நாட்டியம் நடைபெறும். அவர் பல இடங்களில் சுற்றுப் பிரயாணம் செய்து நாட்டியம் நடத்தி வருகிறார். கிடைக்கும் வருமானத்தையெல்லாம், அல்மோராவில் இந்திய நாட்டியக் கலை அபிவிருத்திக்காக ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் இந்தியக் கலை ஸ்தாபனத்தின் உதவிக்காக உபயோகிக்கப்போகிறாராம். இந்த ஸ்தாபனத்துக்காக ஐ. மா. கவர்ன்மெண்டார் ஏற்கனவே 9¼ ஏக்கர் நிலத்தை உதவி யிருக்கின்றனர்.

•

### படையெடுப்பு

சினிமாத் துறையில் சில வடநாட்டு நட்சத்திரங்கள் தென்னாட்டில் படையெடுக்கப் போவதாகப் பலத்த வதந்திகள் உலாவுகின்றன. சாந்தா ஆப்தே தமிழ்ப்படத்தில் நடிக்கும் உத்தேசத்துடன், தமிழ் கற்று வருவதாக ஒரு செய்தி வெளியாயிற்று. இப்பொழுது கல்கத்தாவிலிருந்து உமா, ஸைகால் ஆகிய இருவரும், ஒரு ஹிந்திப் படத்தில் நடிப்பதற்காகத் தென்னாட்டுக்கு வரப்போவதாக ஒரு பலத்த வதந்தி உலாவுகிறது.



## தேவை.

கம்பை தனவைசியர் கல்வி நிலையத்தில் ஹோட்டல் நடத்துவதற்கு பொறுப்பு வாய்ந்தவராகவும், குறைந்தது ரூபாய் 500 டிபாசிட் கட்டக் கூடியதாகவும், எங்கள் திட்டப்படி நடத்தக் கூடியவராகவும் ஒருவர் தேவை. விபரம் வேண்டியவர்கள் கீழ்க்கண்டவர்களுக்கு எழுதித் தெரிந்து கொள்ளலாம். மனுக்கள் டிசம்பர் மாதம் 20உ க்குள் கிடைக்கும்படி அனுப்ப வேண்டும். 1940 வருடம் ஜனவரி மாதம் 1உ முதல் வேலை ஆரம்பம் செய்யப்பெறும்.

மானேஜர், "குமரன்," காரைக்குடி.

or

பிரசிடெண்ட், நாட்டுக்கோட்டை செட்டியார்கள் எடுகேஷனல் டிரஸ்ட், கம்பை, ரெங்கோன்.





## :: சினிமா ::

### சம்பிரதாயம்

மைசூரில் புதிதாக ஏற்பட்டிருக்கும் ஸ்ரீ பவானி சவுண்டு ஸ்டுடியோவின் முதலாவது படம். இந்தக் கம்பெனிக்கு சமஸ்தான கவர்ன்மெண்டார் நந்திபர்வதத்தின் சமீபம் சுமார் இருபத்து மூன்று ஏக்கர் நிலம் விட்டுக்கொடுக்கச் சம்மதித்திருக்கிறார்கள். "ஆயிரம் முகம் படைத்த" ஸ்ரீ ராமகுமார் இந்தத் தமிழ் படத்தை டயரக்ட் செய்கிறார். பூனா சரஸ்வதி சினிடோனில் படம் பிடிக்கப்படும்.

•

### அழைத்துச் செல்லாதே!

ஆந்திர சினிமா நடி மிஸ் கே. புஷ்பவல்லிக்கு கல்கத்தா மாஜிஸ்திரேட் ஒரு தடை யுத்தரவு விடுத்திருக்கிறார். 'மாலதி மாதவம்' என்ற படம் தயாராகி முடியுமுன், நடி கல்கத்தாவை விட்டுச் செல்லக்கூடாதென்பது அவ்வுத்தரவு. படம் பூராவும் முடித்துக்கொடுப்பது என இந்நடி ஸ்ரீ வி. புல்லையாவுடன் ஒப்பந்தம் செய்திருந்தாரென்றும், ஆனால் படப் பிடிப்பு முடியுமுன், நடியை ரெட்டி என்ற ஒருவர் அழைத்துச் செல்ல முயன்றதாயும் மாஜிஸ்திரேட்டிடம் மனுச் செய்ததன் பயனாக இத்தடை யுத்தரவை பிறப்பிக்கப்பட்டது.

•

### மீன் காம்ப்

ஹிட்லரின் சுய சரிதமான 'மீன் காம்ப்' என்ற பெயருடன் ரெஜினால்ட் பாக்வெல் என்பவர் ஆங்கிலத்தில் ஒரு படம் தயாரிக்கப்போகிறார். இது ஹிட்லரையும், அவரது கொள்கையையும் நன்கு விளக்குமாம்.

•

### சந்திர குப்தா

கல்கத்தா காளி பிலிம்ஸ் ஸ்டுடியோவில் இது துரிதமாகத் தயாராகி வருகிறது. ஸ்ரீ வி. கே. ஸாச்சி இதை டைரக்ட் செய்கிறார்.

•

### டாக்கி மெஷின்

இந்தியாவிலேயே டாக்கி இயந்திரத்தைச் செய்ய பம்பாயைச் சேர்ந்த ஹரி ஜி. கோவில் என்பவர் முயற்சித்து, சொந்த ஆராய்ச்சியின் பயனாக வெற்றியும் அடைந்துவிட்டார் என்று தெரிகிறது. பம்பாயில் ஒரு உற்பத்திசாலை நிறுவப் போகிறாராம்.

---

### வ. உ. சிதம்பரம்பிள்ளை தினம்

ஆவினிப்பட்டி விவேகானந்தர் கல்விக் கழகத்தில் 18-11-39 மாலை 4 மணி யளவில் வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்களின் திருஉருவப்படத்துடன் ஊர்வலமாக வந்து ஸ்ரீ ஜி. கல்யாணசுந்தரம் அய்யர் அவர்களின் தலைமையில் ஓர் கூட்டம் கூடிற்று. வேகுப்பட்டி ஆசிரியர் ஸ்ரீ எம். சுப்பிரமணிய தேசிகர் சிதம்பரம் பிள்ளை அவர்களின் வரலாற்றை வெகு அழகாக எடுத்துரைத்தார்.



Edited, Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi, (S. INDIA)

